சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்



"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்

ஜனவரி & பிப்ரவரி 2025
மலர் 46 இதழ் 1 & 2
வருடச் சந்தா ரூ. 150.00
தனிப்பிரதி ரூ.25.00

## "நாமே அமல உற்பவம்"

நண்பர்கள், உபகாரிகள் அனைவருக்கும் இனிய புத்தாண்டு நல்வாழ்த்துகள்

# பரிகார பக்தி எதில் அடங்கியுள்ளது?

மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தியில் ஈடுபட விரும்புகிறவர்களும், அதைக் கொஞ்சம் அனுசரிக்கிறவர்களும் தங்களிடமே கேட்க வேண்டிய கேள்வி: "பரிகார பக்தி எதில் அடங்கியுள்ளது? ஜெபிப்பதிலா? பரித்தியாகங்கள் செய்வதிலா? மாதாவுக்கு எதிரான நிந்தைகளுக்கு ஈடு செய்வதிலா?" என்பதாகும்.

இவை எல்லாவற்றிலும்தான். ஆயினும் பரிகார பக்தியின் சாரம் இல்லாமலே இதெல்லாம் நடைபெற முடியும்.

யாருக்குப் பரிகாரம் செய்கிறோமோ, அவர்களுக்கு நாம் அந்நியராயிராமல், அவர்களின் நன்மைகளைப் புரிந்துகொண்டு, அவர்களின் வேதனைகளை நம்முடையதாக்குவதில்தான் பரிகாரத்தின் சாரம் அடங்கியுள்ளது.

சேசு, மரிய இருதயங்களுக்கு நாம் பரிகாரம் செய்ய வேண்டும். அவர்களுக்கு நாம் அந்நியராயிருக்கக் கூடாது. அற்பப் பாவங்களால் அவர்களுக்குத் தூரமாயிருக்கக் கூடாது. அவர்கள் ஏன், எப்படி வேதனைப் படுகிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். அவர்களுக்குப் பதில் நாமே அந்த வேதனைகளை அனுதாபத்துடன் நம்முடையவையாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அவர்களைத் தாக்குகிற ஒவ்வொரு நிந்தையும், துரோகமும் நம்மையே தாக்குவதாக உணர்ந்து, அதற்குப் பரிகாரம் தேட வேண்டும்.

அதற்கு, நம் வாழ்வு மாறியாக வேண்டும்! பாவத்தில் வாழ்ந்துகொண்டு, சேசு, மரிய இருதயங்களுக்கு எப்படிப் பரிகாரம் செய்ய முடியும்? நம் வாழ்வு சேசு மரியாயின் வாழ்வைப் போல ஆக வேண்டும்.

அவர்கள் நமக்காக, நம்மீதுள்ள அன்பால் வாழ்கிறார்கள். நாமும் அவர்களுக்காக, அவர்கள் மீதுள்ள அன்பால் வாழ வேண்டும்.

அவர்கள் நமக்காக வேதனையில் வாழ்கிறார்கள். நாமும் அவர்களுக்காக வேதனையில் வாழ்வோம்.

அவர்கள் எப்போதும் நம்மையே நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். நாமும் எப்போதும் அவர்களையே நினைத்துக்கொண்டிருப்போம்.

நம் நலனில் அவர்கள் மகிழ்ச்சி கொண்டிருக்கிறார்கள். நாமும் அவர்களுடைய மகிமையில் மகிழ்ச்சி கொண்டிருப்போம்.

அவர்கள் நம் மன்றாட்டுகளை ஏற்று, நமக்கு உதவி செய்யத் தயராயிருக்கிறார்கள். நாம் அவர்களிடம் இடைவிடாமல் நம் ஜெபங்களை சமர்ப்பிப்போம்.

சிலுவைகளையும், துன்பங்களையும் அவர்களை அடையும் கருவிகளாக நமக்கு அனுப்புகிறார்கள். அவற்றை, அவர்களிடம் செல்லும் வழியாக நாம் அமைந்த மனதுடனும், முடிந்தால், மகிழ்ச்சியுடனும் ஏற்றுக் கொள்வோம்.

நாம் பகைவர்களை நேசித்து, நம்மைத் துன்புறுத்துபவர்களுக்காக வேண்டிக்கொண்டால், சேசுவுக்கும், மாதாவுக்கும் அதிகப் பிரியமுடையவர்களாவோம் என்பதால், நம் பகைவர்களை நாம் நேசிப்போம். நம்மைத் துன்புறுத்துபவர்களுக்காக வேண்டிக்கொள்வோம்.

இதுவே பரிகார பக்தியின் அஸ்திவாரமும், அடிப்படையுமாகும். இப்படிப்பட்ட ஐக்கியமும், அன்பும், கண்டு பாவித்தலும், சேசுவுடனும், மாதாவுடனும் நமக்கு இருப்பதே உண்மையான பரிகார பக்தியின் ஞான தத்துவம்!

---

**நம் நண்பர்கள், உபகாரிகளுக்கும், அன்பு வாசகர்களுக்கும், எங்கள் இனிய புத்தாண்டு வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறோம். சென்ற ஆண்டில் நீங்கள் எங்களுக்குச் செய்த சகல நன்மைகள், உபகாரங்களுக் காகவும் உங்களுக்கு நன்றி செலுத்துகிறோம். வருகிற புத்தாண்டு உங்களுக்கு சந்தோஷமும், தேவ சமாதானமும், தேவ ஆசீரும் நிரம்பியதாக இருக்கும்படி உங்களுக்காக ஜெபித்துக்கொள்கிறோம்.**

# மூன்று அரசர்கள் திருநாள்

“எப்பிஃபனி” (“Epiphany”) என்ற வார்த்தை கடவுளின் திருக்காட்சியைக் குறிக்கிறது. கீழ்த் திசையிலிருந்து “யூதர்களின் இராஜாவாகப் பிறந்திருக் கிறவரை ஆராதிக்க வந்த” (மத். 2:2) மூன்று அரசர்களால் குறிக்கப்படுகிற சகல மக்களினங்களுக்கும், திவ்ய இரட்சகராகிய கிறீஸ்துநாதர் வெளிப்படுத்தப்பட் டதை இந்தத் திருநாளில் நாம் கொண்டாடுகிறோம். இடையர்களுக்குப் பிறகு, அவர் புறஜாதியாருக்குத் தம்மை வெளிப்படுத்துகிறார். இத்திருநாளில், கடவுளின் மகிமை சகல மனிதர்களுக்காகவும் இவ்வுலகிற்கு இறங்கி வந்துள்ளதை நாம் காண்கிறோம். அவர் ஒவ்வொரு நாட்டையும், இனத்தையும், மொழியையும் சேர்ந்த எல்லா மக்களையும், மூன்று அரசர்களின் வழியாகத் தம்மிடம் வரும்படி அழைக் கிறார். பிறந்திருக்கிற தேவ பாலன் இஸ்ராயேலருக்கு வாக்களிக்கப்பட்ட மெசையாவாக இருந்தாலும், அவரது இரட்சணியம் சகல ஜாதி ஜனங்களுக்கும் சொந்தமானதாக இருக்கிறது. இவ்வாறு, “அந்தகாரத்தில் உட்கார்ந்திருந்த ஜனம் பெரிய ஒளியைக் கண்டது; மரண நிழலின் திசையில் உட்கார்ந்திருந்தவர்களுக்கு வெளிச்சம் தோன்றிற்று” என்ற இசையாஸின் தீர்க்கதரிசனம் நிறைவேறிற்று. (இசை. 9:1,2). ஏனெனில் அவரே “புறஜாதியாரைப் பிரகாசிப் பிக்கிற ஒளியாக” இருக்கிறார் (லூக்.2:32).



அவருடைய நட்சத்திரத்தைக் கண்ட மாத்திரத்தில், யூதர்களின் அரசர் பிறந்திருக்கிறார் என்று அறிந்து, உடனே அவர்கள் புறப்படுவதைக் காணுங்கள்! செல்ல வேண்டிய தூரமோ மிக அதிகம்! ஒட்டகங்களின் மீது, பாலைவனங்களையும், மலைகளையும், சதுப்பு நிலங்களையும் கடந்து செல்லும் ஒரு நீண்ட பயணம்! வழியில் திருடர், கொள்ளையர் பயம்! உண்மையில் அவர் எங்கிருக்கிறார் என்ற தெளிவான அறிவு அவர்களிடம் இருக்கவில்லை. ஆனால் இதோ, அவர் களுடைய கண்களுக்கு முன்பாக, அவர்களுக்கு வழிகாட்டி நடத்தி வரும்படி, பச்சிளங்குழந்தை யாகிய தெய்வீக அரசர் அனுப்பி வைத்த நட்சத்திரம் மட்டும் இருக்கிறது. இந்தச் சந்தேகங்களும், அச்சங்களும், களைப்பு, மனச் சோர்வு போன்றவையும், புதிதாய்ப் பிறந்திருக்கிற பரலோக அரசரைத் தேடிச் செல்லாதபடி அவர்களைத் தடுத்து விடவில்லை.

எவ்வளவு பலவீனமானது நமது விசுவாசம்! எங்கே இருக்கிறது நம் தேவசிநேகம்? இவ்வளவு அருகில், தன்னந்தனிமையில், தம்மை ஆராதிக்க யாருமற்றவராக, தமது சிறிய திவ்ய நற்கருணைப் பேழையில், ஏக்கத்தோடு காத்திருக்கிற தேவாதிதேவனைச் சந்திக்க விடாமல் நம்மைத் தடுக்க மிக அற்பத் தடைகளும் கூட போதுமானவையாக இருக்கின்றன! ஒரு வாரத்தின் 168 மணி நேரத் தில், (ஞாயிறு திவ்ய பலிபூசை காண) நாம் அவருக்காக, அதுவும் கடமைக்காக, அசமந்தத்தோடு ஒதுக்குவது, அதிக பட்சம் வெறும் இரண்டு மணி நேரம் மட்டுமே!

இந்தத் திருக்காட்சித் திருநாளின் வழியாக, கண்டு அறிவதை விட அதிக ஆழமானதாக இருக் கிற காணாமலே ஏற்றுக்கொள்கிற விசுவாசத்தை நாம் காண்கிறோம். கிறீஸ்துநாதர் புதுமை களையோ, வல்ல செயல்களையோ செய்வதை மூன்று அரசர்கள் காணவில்லை. அவரை

*கம்பீரமும், திடகாத்திரமும் உள்ள ஒரு மனிதனாக அவர்கள் காணவில்லை, அவர் தண்ணீரின் மீது நடப்பதையோ, குருடர்களுக்குப் பார்வையளிப்பதையோ, இறந்தோரை உயிர்ப்பிப் பதையோ காணவில்லை, அவரது ஞானமுள்ள வார்த்தைகளை அவர்கள் கேட்கவில்லை. மாறாக, அதீத தரித்திரத்திலும், தாழ்மையிலும், எல்லாவற்றிற்கும் தமது பரிசுத்த மாதாவைச் சார்ந்திருந்த ஒரு சிறு குழந்தையைத்தான் கண்டார்கள். ஆனால் அவரே மூவுலகின் அதிபதியான சர்வேசுரன் என்றும், தங்களுடையதெல்லாம் அவருடையது என்றும், அவரே தமது பரலோக இராச்சியத்தினுள் தங்களை அனுமதிக்கும்படி வந்து பிறந்திருக்கிறவர் என்றும் அவர்களுடைய விசுவாசக் கண்கள் கண்டுகொண்டன. வறுமையில் மறைந்திருந்த அளவற்ற பொக்கிஷத்தை, பலவீனத்தில் மறைந் திருந்த சர்வ வல்லபத்தை, தம் திருமாதாவின் தாயமுதில் பசியாறி அமைதி கொள்கிற பாலத் துவத்தில், பூமிப் பந்தைத் தம் விரலால் தாங்கியிருக்கிறவரை, அவர்கள் கண்டுபிடித்தார்கள்!*

*அவர் தங்களுக்குச் செய்ய இருந்த இந்த உன்னத நன்மைகளுக்கு ஒரு சிறு நன்றியறிதலாக, அவர்கள், சர்வேசுரனாகிய அவருக்குத் தாங்கள் கொண்டு வந்த* **தூபத்தையும்**, *அரசர்களுக்கு அரச ராகிய அவருக்குப்* **பொன்னையும்**, *தமது திருச்சரீரத்தையும், இரத்தத்தையும் கொண்டு தங்களை மீட்க இருந்த தேவ பலிப்பொருளான அவருக்குத் தங்கள்* **மீறையையும்** *ஒப்புக்கொடுத்தார்கள். ஏனெனில் தூபம் சர்வேசுரனுக்கு மட்டுமே உரியது, பொன் அரசருக்குத் தகுதியுள்ள காணிக்கை யாயிருக்கிறது, மரித்த சரீரங்களில் பூசப்பட்ட நறுமணத் தைலம் தயாரிக்க உதவும் மீறை, தமது மரணத்தின் மூலம் அவர் நம்மை மீட்டு இரட்சிப்பார் என்பதைக் காட்டுகிறது.*

*நல்ல கள்ளனின் விசுவாசத்தைப் போல் இதுவும் ஆச்சரியத்திற்குரிய விசுவாசமே! அவர் அச்சத்திற்குரிய மரணத்தின் கொடூர வேதனையில் துடித்துக்கொண்டிருந்தவரில் கடவுளை அடையாளம் கண்டுகொண்டது போலவே, தம் திவ்ய அன்னையின் மடியில் இருந்த பச்சிளங் குழந்தையில் இவர்கள் அவரைக் கண்டுபிடித்தார்கள். தீஸ்மாஸாவது ஆண்டவரின் போதனை களையும், செயல்களையும் கேள்விப்பட்டிருந்தார். அந்த உதவி கூட மூன்று அரசர்களுக்கு இல்லை. ஆயினும் அவர்கள் அவரை விசுவசித்தார்கள், ஆராதித்தார்கள், நம்பினார்கள், நேசித்தார்கள்!*

*கிறீஸ்துவை நாம் எங்கே கண்டு, நம் பொக்கிஷங்களைத் திறந்து, அவரது ஊழியத்தில் அவற் றைப் பயன்படுத்துவது என்று மூன்று அரசர்கள் காட்டுகிறார்கள். மாமரியின் மடியில், மாமரியின் நேசத்தில், மாமரியின்மீது உண்மை பக்தியில் நாம் அவரைக் கண்டு ஆராதிக்க வேண்டும். திருக் குடும்பத்தார் ஏழைகளாக இருந்தார்கள். வாழ்வின் தேவைகளுக்கு மூன்று அரசர்களின் காணிக்கை யில் ஒரு பகுதியை அவர்கள் பயன்படுத்திக்கொண்டார்கள். பசி, தாகம், ஆடையின்மையிலும், நோயிலும், சிறையிலும் வருந்துவோரில் கிறீஸ்துவைக் காண மூன்று அரசர்கள் நமக்குக் கற்பிக் கிறார்கள். நம் செல்வங்களையும், அறிவையும், ஞானத்தையும், பிறருக்காகச் செலவிடும்படி கடவுள் தந்துள்ள எல்லாக் கொடைகளையும், செல்வத்திலும், தேவ அறிவிலும் ஏழைகளாயிருப்பவர் களுக்குச் செலவிடும்போது, மெய்யாகவே அது கிறீஸ்துநாதரின் திருக்காட்சியாக நமக்கு இருக்கும்!*

*முடிவு: மெய்யாகவே விசுவாசமாகிய நட்சத்திரத்தால் நாம் வழிநடத்தப்படுகிறோம் என்றால், நாம் பெற்றுள்ள ஆன்ம, சரீரக் கொடைகளையும், நன்மைகளையும் ஏழைகளோடு பகிர்ந்து கொள்வோம். அவை மதிப்பு மிக்கவை. ஏனெனில் அவை நித்திய ஜீவியத்தை நமக்குப் பெற்றுத் தருகின்றன. ''என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே! வாருங்கள். உலகமுண்டானது முதல் உங்களுக்காக ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள்'' (மத். 25:35) என்னும் நம் ஆண்டவரின் அமிர்த வார்த்தைகளைக் கேட்க அவை நம்மைத் தகுதி யுள்ளவர்களாக்குகின்றன.*

*மரியாயே வாழ்க!*

# அமல உற்பவியா, அமல உற்பவமா?



*1854,* டிசம்பர் *8* அன்று, பரிசுத்த பாப்பரசரான முத். ஒன்பதாம் பத்திநாதர், தேவமாதா ஜென்மப் பாவமின்றி உற்பவித்தவர்களாக, அதாவது, அமல உற்பவியாக இருக்கிறார்கள் என்பதை விசுவாச சத்திய மாகப் பிரகடனம் செய்தார். மூன்றரை ஆண்டுகள் கழித்து, லூர்தில், அர்ச். பெர்னதெத்தம்மாள் *1858,* மார்ச் *25* அன்று, திவ்ய கன்னிகையிடம் அவர்களது திருப்பெயர் என்னவென்று கேட்டபோது, "**நாமே அமல உற்பவம்!**" என்று திவ்ய கன்னிகை திருவாய் மலர்ந்தருளினார்கள்.

தம்மிடம் பெர்னதெத் கூறிய இந்த வார்த்தைகளைக் கேட்டபோது, லூர்து பங்குக் குரு அதிர்ந்து போனார். ஏனெனில், பிரகடனம் செய்யப் பட்ட சத்தியத்தின்படி, மாமரி "நானே அமல உற்பவி" என்றுதான் கூறியிருக்க வேண்டும். ஆனால் மாமரி தன்னை அமல உற்பவம் என்று அழைத்துக்கொள்கிறார்கள். ஆனால் இது கடவுளின் திருப்பெயராக மட்டுமே இருக்க முடியும். உதாரணமாக, "நான் ஜீவிக்கிறேன்" என்று ஒரு சிருஷ்டி கூற முடியும். ஆனால் "நானே ஜீவியம்" என்று கூற வல்லவர் சர்வேசுரன் மட்டுமே!

அப்படியானால் மாமரியின் இந்தத் திருப்பெயர் நமக்கு வெளிப்படுத்துவது என்ன? இதை ஓரளவாவது புரிந்துகொள்ள, முதலில் திவ்ய கன்னிகை தனது திருவுதரத்தில் தாங்கி ஈன்றெடுத் தவர் எப்படிப்பட்டவர் என்பதை நாம் தியானிக்க வேண்டும். மோயீசன் சகல மனிதர்களிலும் அதிக சாந்தமுள்ளவராக இருந்தார் (காண். எண்.*12:3*). இருந்தும், மனித சுபாவத்தில், அவர் கடவுளை முகமுகமாய்த் தரிசிக்க இயலாதவராயிருந்தார். ஏனெனில், சர்வேசுரன் அவரை நோக்கி, "ஒரு மனிதனும் நம்மைக் கண்டு உயிரோடிருக்க இயலாது என்பதால்... நீ நமது பின்புறத்தைக் காணப் பேறுபெறுவாய். நம் முகத்தையோ நீ காண மாட்டாய்" என்றார் (யாத். *33:20-22*). ஆம், கடவுளால் தொடப்படுதலோ, ஆட்கொள்ளப்படுதலோ இன்றி, அவருடைய வெறும் காட்சி யையும் கூட, உலகிலிருந்த மிகப் பரிசுத்தரான மனிதரும் கூட, தாங்க இயலாதவராயிருந்தார்.

சேனைகளின் கர்த்தர் தமது திருநாமத்தால் அர்ச்சிக்கப்பட்ட பெட்டகத்தில் வாசம் பண்ணி வந்தார். அந்தத் திருப்பெட்டகம் ஏற்றப்பட்டிருந்த புது இரதத்தை இழுத்து வந்த மாடுகள் மிரண்டதால் அது சரிந்து விழ இருந்ததைக் கண்ட ஓசா என்பவன் அது விழுந்து விடக் கூடாது என்ற நல்லெண்ணத்தில் சற்றும் யோசிக்காமல் அதைத் தாங்கிப் பிடித்தான். ஆனால் தாம் வாசம் பண்ணும் அந்தப் பேழையைத் தொடத் துணிந்த அவனை அந்த இடத்திலேயே கர்த்தர் அடித்து வீழ்த்த, அவன் பெட்டகத்தின் அருகிலேயே செத்து விழுந்தான் என்று பரிசுத்த வேதாகமம் கூறுகிறது (*2* அரசர்.*6:1-7*). இந்த தேவ பெட்டகத்தில், வரவிருந்த மெசையாவின் நித்திய குருத் துவத்தைக் குறிக்கும் ஆரோனின் தண்டுகோலும், திவ்ய நற்கருணையாகிய அவருடைய மகா பரிசுத்த தேவத்திரவிய அனுமானத்தைக் குறிக்கும்படி ஒரு பொற்கலசத்தில் மன்னாவும், அவரே திருச்சட்டத்தை ஏற்படுத்துபவர் என்பதைக் குறிக்க, மோயீசனின் இரு கற்பலகைகளும் இருந்தன. இவ்வாறு, இந்தத் தேவ பெட்டகம், தனக்குள் தேவ திருச்சுதனை அடக்கித் தாங்கவிருந்த ஒரு மகா பரிசுத்த கன்னிகையாகிய உயிருள்ள தேவ பெட்டகத்தைக் குறிப்பதாக இருந்தது.

இவ்வாறு, மனித சுபாவத்தில், மனிதனால் தரிசிக்கப்பட இயலாதவரும், அவனால் அணுகப் படவோ, தொடப்படவோ இயலாதபடி, மனிதருக்கு "எட்டாத ஒளியில் வசிக்கிறவருமான"

*(1திமோ.6:16) சர்வேசுரன் இப்போது மனிதனாய் அவதரிக்கும்போது, பதினைந்து வயதேயான ஒரு சின்னக் கன்னிகை அவரைத் தன் திருவுதரத்தில் தாங்க வேண்டும்! மனிதனால் தரிசிக்கப்படவும், நெருங்கப்படவும் இயலாத தேவாதிதேவனை ஓர் இளங்கன்னிகை கருத்தாங்கி ஈன்றெடுத்து, தன் தாயமுதால் அவரைப் போஷித்து, தன் அன்பின் அணைப்பால் அவரைத் தேற்ற வேண்டும்.*

*வெறும் மனித சுபாவத்தில், சர்வேசுரனைத் தாங்க "மனுஷியால்" இயலாது என்பதை நிரூபித்து விட்டோம். இந்த மகா உத்தம கன்னிகை மெய்யாகவே, "கடவுளின் தகுதியுள்ள தாயாக" இருக்க வேண்டும்!! அப்படி இருந்தால் மட்டுமே மனிதாவதாரப் பரம இரகசியம் நடந்தேற முடியும். (இது இன்னும் மறைந்திருக்கிற மரியாயின் பரம இரகசியங்கள் வெளிப்படுத்தப்பட வேண்டிய மரியாயின் யுகமாக இருப்பதால், அர்ச். லூயிஸ் த மோன்போர்ட் இறந்து 300 வருடங்களாகி விட்ட இப்போது, இனியும் "இங்கு எல்லா நாவுகளும் மவுனமாயிருப்பது" தேவையில்லை என்று தோன்றுகிறது!) ஆம்! சர்வேசுரனும், மனிதனுமானவரைத் தன் மகனாய்க் கொண்டிருப்பதற்கு, இந்தச் சின்னக் கன்னிகை தேவ-மனுஷியாக, தேவ சுபாவத்தில் பரிபூரணமாகப் பங்கடைந்திருப்பதன் மூலம், "பிரியதத்தத்தினாலே பூரணமானவர்களாக" இருப்பது அவசியமாயிருந்தது! இதற்கு, அவர்கள் தனது திவ்ய பத்தாவாகிய இஸ்பிரீத்துசாந்துவோடு, இனி ஒருபோதும் பிரிக்கப்படாத விதத்தில் ஒன்றுகலந்து, அவரது தெய்வீகத்தால் "பூரணமாக" நிரப்பப்பட வேண்டியிருந்தது!*

*இது நிகழாவிடில், தேவ திருச்சுதனின் மனிதாவதாரமோ, அதன் விளைவான மனித இரட்சணியமோ சாத்தியமேயில்லை! ஏனெனில் இதே அர்ச்சியசிஷ்டவர் குறிப்பிடுவது போல மாமரி, வெறும் மனித சுபாவத்தில் அணுவிலும் சிறியவர்களாக இருக்க, ("மரியாயின் மீது உண்மை பக்தி," எண் 14), அவர்களால் சுமக்கப்பட வேண்டியவரோ, பிரபஞ்சத்தை விடப் பெரியவரா யிருக்கிறார்! ஆகையால் வெறும் மனித சுபாவத்தில் சர்வேசுரன் மனிதனாய்க் கருத்தரிக்கப் படுவதை விட, ஓர் அணுவுக்குள் பிரபஞ்சம் அடங்குவது அதிக எளிதாயிருக்கும்! ஆகவே, மாமரி "தெய்வீகமாக்கப்படுவது" இன்றியமையாததாக இருந்தது. இனி, மகா பரிசுத்த அமல உற்பவியின் அப்போஸ்தலரான அர்ச். மாக்ஸிமிலியன் கோல்பே இதை விளக்கக் கேட்போம்:*

*"இஸ்பிரீத்துசாந்துவானவர் (பிதா, சுதன் இருவரின் நேசத்திலிருந்து புறப்படுகிற) "உற்பவமாக" இருக்கிறார்; அவர் மகா பரிசுத்த, அளவற்ற பரிசுத்ததனமுள்ள, கறைதிரையற்ற, அமல உற்பவமாக இருக்கிறார்... இந்தத் தமத்திரித்துவ நேசத்தால் முழுமையாக நிறைந்திருக்கிற சிருஷ்டி, பாவத்தின் அற்பக் கறையும் இல்லாதவர்களும், தேவ சித்தத்திலிருந்து ஒருபோதும் அணுவளவும் விலகாதவர்களுமாகிய அமல உற்பவியே. தேவ ஆவியானவர் மாதாவில் படைக்கப்படாத நேசமாக: பிதாவுடையவும், சுதனுடையவும் நேசமாக, கடவுள் தம்மையே நேசிக்கிற நேசமாக, பரிசுத்த தமத்திரித்துவத்தின் நேசமாக இருக்கிறார். அவர் பலனுள்ள நேசமாக, "உற்பவமாக" இருக்கிறார். கடவுளின் சாயலாக இருக்கிற மனித சிருஷ்டிகளிடையே (தாம்பத்திய) நேசத்தால் விளையும் ஐக்கியம், மற்ற எல்லா ஐக்கியங்களையும் விட அதிக அந்நியோந்நியமானதாக இருக்கிறது. (அதில்) ஆணும் பெண்ணும் ஒரே சரீரத்தில் இருவர் ஆகிறார்கள் என்று பரிசுத்த வேதாகமம் கூறுகிறது. நம் ஆண்டவராகிய சேசுநாதரும் இதை வலியுறுத்திக் கூறுகிறார்: "ஆகையால் அவர்கள் இனி இருவராயிராமல் ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்" (மத்.19:6).*

*மாமரியின் அமல உற்பவம் தெய்வீக வாழ்வை ஒரு மாசற்ற விதத்தில் கருத்தரிக்கிறது. மரியாயின் திருச்சரீரத்தின் கன்னிமையுள்ள திருவுதரம் அவருக்காக (இஸ்பிரீத்துசாந்துவுக்காக) மட்டுமே ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. அவராலேயே அவர்கள் குறித்த காலத்தில் தேவ மனிதரின் தேவ-மானிட வாழ்வைக் கருத்தரிக்கிறார்கள்.*

*லூர்து மாநகரில் அமல உற்பவி இனியும் தன்னை "பாவ மாசின்றி உற்பவித்த ஸ்திரீ" என்று அழைத்துக்கொள்ளவில்லை. சிருஷ்டிகளிடையே மனைவி கணவனுக்குச் சொந்தமான வள் என்பதால் அவள் அவனது பெயரைத் தன்னுடையதாக்கிக் கொண்டு, தன்னை அவனோடு இணைத்து, அவனுக்கு சமமானவள் ஆகிறாள், அவனுடனான தனது ஒன்றிப்பில், சிருஷ்டிக்கப் படுகிற ஒரு புதிய உயிரை உருவாக்கும் கருவியாக அவள் ஆகிறாள் என்றால், இஸ்பிரீத்துசாந்து வானவரின் திருநாமத்தின் காரியத்தில் இது இன்னும் எவ்வளவு அதிகம் உண்மையாக இருக்க வேண்டும்! அமல உற்பவம் என்பது, முழுமையான, சுபாவத்திற்கு மேலான ஒழுங்கிற்குப் பலனுள்ளதாக இருக்கிற நேசத்தில் (அதாவது, தேவ-மனிதனை உருவாக்குவதாக இருக்கிற நேசத்தில்) அவர் யாரில் வாழ்கிறாரோ, அந்த மாசற்ற ஸ்திரீயின் திருப்பெயராக இருக்கிறது."*

*ஆம், அமல உற்பவத்தில் நம் திவ்ய மாதா இஸ்பிரீத்துசாந்துவானவரில் நம் பரிசுத்த அமல உற்பவமாக, தேவ-மனுஷியாக, அதனால் நம் இரட்சகரைக் கருத்தரித்து, ஈன்றெடுக்க வல்லவர்களாக இருந்தார்கள். அவர்கள் வழியாகவே இரட்சணியம் நமக்கு சாத்தியமாயிற்று! அவர்கள் வழியாகவே தேவ திருச்சுதன் நமக்கு மோட்ச கபாடங்களைத் திறந்தருளினார். நம் திவ்ய மாதாவின் வழியாக, கிறீஸ்துநாதரின் தெய்வீகத்தில் நாமும் பங்கடைய வேண்டும் என்பதே அவர்களுடைய ஓயாத விருப்பமாக இருக்கிறது. தனது பிள்ளை ஒன்று தனது சரீரத்தின்மீதும், உலகத்தின்மீதும், பசாசின்மீதும் வெற்றிகொண்டு, வெற்றி வீரனாகப் பரலோகத்தில் நுழைவதைக் காண்பதை விட மாமரிக்கு மேலான இன்பமோ, ஆறுதலோ வேறு இல்லை. உண்மையாகவே நம் தேவமாதா பக்தி, அவர்களின் பரிசுத்ததனத்திலும், தாழ்ச்சியிலும், சிநேகத்திலும், அவர்களைப் போல் ஆவதிலும், மாமரியாகிய அச்சில் வார்க்கப்பட்டு, கிறீஸ்துநாதரின் சாயலாக உருவாக்கப் படுவதிலும் அடங்கியிருக்கிறது!*

*அமல உற்பவ மரியாயே வாழ்க!*

---

## அர்ச். அகதாவுக்குக் கீழ்ப்படிந்த எரிமலைக் குழம்பு!

அர்ச். அகதாவின் மரணத்திற்குப் பிறகு, அவள் வழியாக அநேக புதுமைகள் நிகழ்ந்தன. அவற்றில் பின்வரும் புதுமை மிகவும் புகழ் பெற்ற ஒன்றாகும். அது, அவள் அடக்கம் செய்யப்பட்ட சிசிலி மாகாணத்திலுள்ள கட்டானியா நகரத்தில் நிகழ்ந்தது.

அர்ச். அகதா இறந்து ஒரு வருடத்திற்குப் பிறகு, ஒரு நாள் எட்னா என்னும் எரிமலை திடீரென வெடித்துச் சீறியது. அது தொடர்ந்து மிக அதிகமாக எரிமலைக் குழம்பையும், எரிமலைச் சாம்பலையும், அனல் பறக்கும் கந்தக மேகங்களையும் வெளியேற்றிக் கொண்டிருந்ததைக் கண்ட கட்டானியா வாசிகள் மிகுந்த அச்சத்திற் குள்ளானார்கள். ஆகவே, அவர்கள் அர்ச். அகதாவிடம் ஜெபிக்கத் தொடங்கினார்கள். முன்பு அகதாவின் வேத சாட்சியத்தின்போது, அவள் நிலக்கரித் தணலின் மீது கிடத்தப்பட்டு, அவளுடைய சரீரம் எரிந்துகொண்டிருக்க, எந்தப் பாதிப்புமின்றி இருந்ததும், கட்டானியா மக்களால் பக்தியோடு பாதுகாக்கப்பட்டு வந்ததுமான அவளுடைய முக்காட்டுத் துகிலை அவர்கள் அவளது கல்லறையிலிருந்து வெளியே கொண்டு வந்து, அதைத் தங்கள் நகர வீதிகளில் சுற்றுப் பிரகாரமாகக் கொண்டு சென்றார்கள். அதே சமயத்தில், பொங்கி வழிந்து நகரத்தை நோக்கி வந்துகொண்டிருந்த நெருப்புக் குழம்பு தடுத்து நிறுத்தப்பட்டது. கட்டானியா காப்பாற்றப்பட்டது. இது அவளது வல்லமையில் மக்களுக்கிருந்த நம்பிக்கையைத் திடப்படுத்தியது.

மார்பகப் புற்றுநோய் போன்ற நோய்களால் துன்புறும் மக்களின் பாதுகாவலியாக அர்ச். அகதா அறியப் பட்டிருக்கிறாள். மேலும், தீ விபத்துகள், நில நடுக்கங்கள், எரிமலை வெடிப்புகள் போன்றவற்றிலிருந்து பாதுகாப்பவளாகவும் அவள் மதிக்கப்படுகிறாள். குறிப்பாக, அதீத மழை, வெள்ளம், நில நடுக்கங்கள், ஆழிப் பேரலை போன்ற தீமைகளை நாம் எதிர்நோக்கியிருக்கிற இந்த இறுதிக்காலங்களில் அர்ச். அகதா தன்னிடம் ஜெபிப்பவர்களை இந்தத் தீமைகளிலிருந்து பாதுகாக்க வல்லவளாயிருக்கிறாள். திருநாள்: பிப்ரவரி 5.

# தபசு காலத்திற்கான ஆயத்தம்



**பயணத்திற்கு ஆயத்தம்:** செப்துவாஜெஸிமா ஞாயிறு தபசு காலத்திற்கான ஆயத்த காலத்தின் தொடக்கமாக இருக்கிறது. இது தோராயமாக உயிர்ப்பு ஞாயிறுக்கு முன் வரும் எழுபதாம் நாளாக இருக்கிறது. பரிசுத்த திருச்சபை தனது ஞானத்தில், தபசு காலத்தைப் பற்றித் தியானிக்கவும், அதற்காக நம்மை ஆயத்தம் செய்யும் இந்த நாட்களை நமக்குத் தருகிறது. இது, நம் ஆன்ம திருயாத்திரையின்மீது நம் கவனத்தைக் குவிக்கும்படியும், கடவுளுக்கு நம் அர்ப்பணத்தைப் புதுப்பிக்கும்படியும் ஞான முறையில் நம் கவனத்தை ஈர்க்கும் காலமாக இருக்கிறது.

குறிப்பாக, செப்துவாஜெஸிமா ஞாயிறு வாசகங்கள் ஓர் ஓட்டப் பந்தயம் மற்றும் திராட்சைத் தோட்ட வேலையாட்களை நம் கண்முன் நிறுத்துகின்றன. இந்த இரு உவமைகளும், ஒழுக்கம், நிலையாயிருத்தல், தாழ்ச்சி, கடவுளின் இரக்கத்தில் நம்பிக்கை வைத்தல் என்னும் கிறீஸ்தவ வாழ்வு பற்றிய அடிப்படை சத்தியங்களைக் குறித்துக் காட்டுபவையாக இருக்கின்றன.

## 1. ஞான ரீதியான ஓட்டப் பந்தயம்: அழியாத நித்திய முடிக்காகப் பாடுபடுதல்

அர்ச். சின்னப்பர், தாம் கொரிந்தியருக்கு எழுதிய நிருபத்தில், கிறீஸ்தவத் திருயாத்திரையை விளக்க, ஒரு பந்தயக் காட்சியைப் பயன்படுத்துகிறார். "பந்தயசாலையிலே ஓடுகிறவர்களெல்லாரும் ஓடுகிறார்கள்; ஆகிலும் ஒருவனே பரிசைப் பெற்றுக்கொள்ளுகிறான் என்று அறியீர்களோ? நீங்களும் அதைப் பெற்றுக்கொள்ளத்தக்கதாக ஓடுங்கள்" (1 கொரி. 9:24). இவ்வாறு, அவர் நம் ஆன்ம திருயாத்திரையை ஓர் ஓட்டப்பந்தய வீரனின் தயாரிப்போடு ஒப்பிடுகிறார்:

**ஒழுக்கம்:** ஓட்ட வீரர்கள் தங்கள் உடல்களைப் பயிற்றுவிப்பது போலவே, கிறீஸ்தவர்கள் ஜெபம், உபவாசம் மற்றும் தேவத்திரவிய அனுமானங்களின் வழியாகத் தங்கள் ஆத்துமங்களைப் பயிற்றுவிக்க வேண்டும்.

**நோக்கம்:** ஓட்டப் பந்தய வீரர்கள் அழிந்து போகிற ஒரு முடியைப் பெற்றுக்கொள்வதற்காக ஓடுகிறார்கள். ஆனால் நாமோ அழியாத **நித்திய ஜீவியத்தின் முடியைப்** பெற்றுக்கொள்வதற்காக ஓடுகிறோம்.

**கவனத்தை ஒருமுகப்படுத்துதல்:** ஓட்டப் பந்தய வீரன் பராக்குகளைத் தவிர்க்கிறான், வெற்றிக் கோட்டிலேயே எப்போதும் தன் கவனத்தை இருத்துகிறான். அதே போல, நாமும் பாவ சோதனைகளையும், இவ்வுலகக் கவலைகளையும் எதிர்த்து நின்று, நம் கண்களைக் கிறீஸ்துநாதரின்மீது பதித்து வைத்திருக்க வேண்டும்.

### செயல்முறை:

**1. உங்கள் அர்ப்பணத்தைப் பரிசோதித்துப் பாருங்கள்:** நாம் உறுதியான தீர்மானத்தோடு இந்தப் பந்தயத்தில் ஓடுகிறோமா, அல்லது ஞான காரியங்களில் ஆர்வமின்றி இருக்கிறோமா?

**2. ஆன்ம இலக்குகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்:** ஓடுகிறவர்கள் தாங்கள் அடைய வேண்டிய இலக்குகளை நிர்ணயித்துக்கொள்வது போலவே, அனுதின ஜெபம், சீரான இடைவெளிகளில் பாவசங்கீர்த்தனம், பிறர்சிநேகச் செயல்கள் போன்ற நம் ஞான அனுசரிப்புகளை நாம் திட்டமிட்டு செயல்பட வேண்டும்.

## 2. திராட்சைத் தோட்ட வேலையாட்கள் பற்றிய உவமை: பொது அழைப்பு

*பரிசுத்த சுவிசேஷ வாசகத்தில் (மத். 20:1-16), பகல் பொழுது முழுவதும் தம் திராட்சைத் தோட்டத்திற்கு வேலையாட்களைக் கூலிக்கு அமர்த்தும் ஓர் எஜமானனின் உவமையைக் கூறுகிறார். சிலர் விடியற்காலையிலும், வேறு சிலர் காலை பத்து மணிக்கும், இன்னும் சிலர் நண்பகலிலும், வேறு சிலர் கடைசி ஒரு மணி நேரத்திற்கும் கூட வேலைக்கு அமர்த்தப்படு கிறார்கள். பகல் முடிவில், அவர்கள் எவ்வளவு நேரம் வேலை செய்திருந்தாலும், ஒரே கூலியைப் பெறுகிறார்கள்.*

### இந்த உவமையின் முக்கியப் பாடங்கள்:

**1. கடவுளின் அழைத்தல் பொதுவானது:** *தோட்ட எஜமானன் ஒரு பகலில் எல்லா மணி வேளை களிலும் வேலையாட்களை அமர்த்துகிறான். கடவுள் அந்தஸ்து வேறுபாட்டையோ, மனிதர் களின் கடந்த காலப் பாவங்களையோ பொருட்படுத்தாமல், அனைவரையும் தம் திராட்சைத் தோட்டத்தில் உழைக்க அழைக்கிறார். நாம் குழந்தைப் பருவத்திலிருந்தே கிறீஸ்துநாதரைப் பின்தொடர்ந்திருந்தாலும் சரி, அல்லது இப்போதுதான் அதைத் தொடங்குகிறோம் என்றாலும் சரி, நாம் அனைவரும் ஒரே விதமாகவே அவரால் வரவேற்கப்படுகிறோம்.*

**2. இரட்ணியம் ஓர் இலவசக் கொடை, அது ஒரு சம்பாவனையல்ல:** *உவமையில் கூறப்படும் கூலி நித்திய ஜீவியத்தைக் குறிக்கிறது. அது நாம் எத்தனை மணி நேரம் வேலை செய்தோம் என்பதைப் பொறுத்து அல்ல, மாறாக, கடவுளின் இரக்கத்தின் தாராளத்தின்படி மட்டுமே இலவசமாகத் தரப்படுகிறது. அர்ச். அகுஸ்தினார் நமக்கு நினைவுபடுத்துவது போல: "கடவுள் நம் தகுதிகளுக்கு அல்ல, மாறாகத் தம் சொந்தக் கொடைகளுக்கே முடிசூட்டுகிறார்." ஆயினும் தம் தோட்டத்தில் வேலை செய்பவர்களுக்கு மட்டுமே அவர் இந்தக் கொடையை வழங்குகிறார் என்பதும் உண்மை.*

**3. பொறாமைக்கு எதிராக உங்களைக் காத்துக்கொள்ளுங்கள்:**

*விடியற்காலையிலேயே வேலைக்கு வந்தவர்கள் எஜமானனின் செயலை நீதியற்றது என்று மதித்தார்கள். நாம் எந்த ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொள்ளாதிருக்கையில், மற்றவர்கள் அவற்றைப் பெற்றுக்கொள்வதாக நமக்குத் தோன்றும்போதும்கூட, கடவுளின் இரக்கத்தில் அக்களிப்புக் கொள்ளும்படி இது நமக்கு அறிவுறுத்துகிறது.*

### செயல்முறை:

**1. கடவுள் குறிக்கும் நேரத் திட்டத்தில் நம்பிக்கை வையுங்கள்:** *சிலர் வாழ்வின் தொடக்கத்திலும், சிலர் பிந்தியும் அழைக்கப்படுகிறார்கள். அவருடைய அழைத்தலுக்கு நாம் என்ன பதில் தருகிறோம் என்பதுதான் முக்கியம். நாம் விசுவாசத்தோடும், தாழ்ச்சியோடும் பதிலளிக்கிறோமா?*

**2. கடவுளின் தாராளத்தில் அக்களிப்புக்கொள்ளுங்கள்:** *மற்றவர்களின் இரட்சணியத்தைப் பற்றி நம்மால் மகிழ்ச்சி கொண்டாட முடிகிறதா? அல்லது, கடவுளின் வரப்பிரசாதம் ஓர் இலவசக் கொடை என்பதை மறந்து, நம்மை நாம் அவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறோமா?*

**3. ஆயத்த காலம்: தபசு காலத்தை எதிர்பார்த்திருத்தல்:** *செப்துவாஜெஸிமா காலம் என்பது, தபசு காலத்தில் ஓட்டப் பந்தயம் தீவிரமடைவதற்கு முன், அதற்கு ஆயத்தமாக, ஞான முறையில், நம் ஆத்துமத்தை உஷ்ணப்படுத்திக்கொள்ளும் காலமாக இருக்கிறது. ஊதா நிற பூசை உடுப்புகள் நம் உணர்வு தவ நிலைக்கு மாறுவதைக் குறிக்கின்றன. மனந்திரும்புதல், சுய புதுப்பித்தல் ஆகிய வற்றின் தேவையை அவை நமக்கு நினைவுபடுத்துகின்றன.*

## ஆயத்தம் செய்யும் விதம்:

**1. சுய பரிசோதனை:** *உன் ஆன்ம வாழ்வைப் பரிசோதித்துப் பார். ஏன் இந்தப் பந்தயத்தில் பங்குபெறுகிறாய்? உன்னைப் பாரமாக்குகிற பாவங்கள் அல்லது உன் வேகத்தைக் குறைக்கிற பராக்குகள் உன்னிடம் உள்ளனவா?*

**2. உன்னையே முறைப்படுத்திக்கொள்:** *ஜெபத்திற்கு நேரம் ஒதுக்குதல், உன் வாழ்க்கை முறையை எளிமைப்படுத்துதல், இரக்கச் செயல்களின் கவனத்தைக் குவித்தல் என்பவை போன்று, தபசு காலத்திற்குள் உன்னை இட்டுச் செல்லக்கூடிய வழக்கங்களை இப்போதே உன்னில் உருவாக்கத் தொடங்கு.*

**3. தபசு கால இலக்குகளை நிர்ணயித்துக்கொள்:** *உன் ஜெபம், உபவாசம், தர்மம் செய்தல் ஆகியவற்றைத் திட்டமிடு. கடவுளுக்கு இன்னும் அதிக நெருக்கமானவனாக இந்தப் பரிசுத்த காலத்தைப் பயன்படுத்திக்கொள்வதில் கருத்தாயிரு.*

*“மற்றவர்களுக்குப் பிரசங்கித்தபிறகு நானே ஒருவேளை தள்ளுண்டவனாய்ப் போகாதபடி, என் சரீரத்தைத் தண்டித்துக் கீழ்ப்படுத்துகிறேன்” என்கிறார் அர்ச். சின்னப்பர் (1கொரி. 9:27). நாம் உத்தமதனத்தை நோக்கி நிலையான விதத்தில் முன்னேறிச் செல்லவே அழைக்கப்படு கிறோம். வே வரப் பிரசாதமின்றி, நம் முயற்சிகள் பலன் தராது.*

## முடிவு: சந்தோஷமாகவும், நிலையான விதத்திலும் ஓடுதல்

*கிறீஸ்தவ வாழ்வு ஒரு குறுகிய தூர ஓட்டமல்ல, மாறாக, அது நிலைத்த தன்மையும், ஒழுக்க மும், விசுவாசமும் தேவைப்படும் மராத்தான் ஓட்டம். இந்த செப்துவாஜெஸிமா காலத்தில், நல்ல நோக்கத்தோடும், அபரிமிதமான தேவ இரக்கத்தில் நம்பிக்கையோடும் இந்தப் பந்தயத்தில் ஓட, புதிதாய் நம்மை ஈடுபடுத்திக்கொள்வோமாக. மேலும், இரட்சணியம் என்பது தமக்காக உழைப்பவர்களுக்குக் கடவுள் தருவதும், அவர்கள் நன்றியோடு பெற்றுக்கொள்ள வேண்டியது மான ஓர் இலவசக் கொடை என்பதை நினைவில் கொள்வோமாக. திராட்சைத் தோட்ட வேலை யாட்களாகிய நாம், தமது இராச்சியத்தில் உழைக்க நம்மை அழைக்கும் எஜமானரின் குரலைக் கேட்டு, மகிழ்ச்சி நிறைந்த இருதயத்தோடு அவரது அழைப்பை ஏற்றுக்கொள்வோமாக. ஆமென்.*

---

## அர்ச். ஆக்னஸ் சேசுபாலனிடமிருந்து எடுத்துக்கொண்ட திருச்சிலுவை!

ஒரு முறை, அர்ச். ஆக்னஸம்மாள் மடத்துச் சிற்றாலயத்தில் ஜெபித்துக்கொண்டிருந்தபோது, திவ்ய கன்னிகை திவ்ய பாலனைச் சுமந்தபடி அவளுக்குத் தோன்றினார்கள். அன்று அவர்களுடைய பரலோக ஆரோகணத் திருநாள். சம்மனசுக்களின் இராக்கினி தனது திருமகனை ஆக்னஸின் கரங்களில் தந்து, அவள் ஒரு சில நிமிடங்கள் அவரை வைத்திருக்க அவளை அனுமதித்தார்கள்.

புனிதையின் சந்தோஷப் பரவசத்தை யாரால் உணர முடியும்! ஆக்னஸ் தேவ பாலனிடம் தன் பக்கத்திலேயே இருந்து விடும்படி அல்லது தன்னையும் அவரோடு அழைத்துச் செல்லும்படி அவரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண் டாள். ஆயினும், இந்த ஆசை நிறைவேறுவதற்கான காலம் இன்னும் வராததால், கன்னியர்களின் இராக்கினி தன் திருமகனை அவளிடமிருந்து திரும்ப வாங்கிக்கொண்டார்கள்.

தேவ பாலன் புறப்படப் போகிறார் என்று உணர்ந்த ஆக்னஸ், அவர் தம் கழுத்தில் அணிந்திருந்த ஒரு சிறு சிலுவையை இரகசியமாகக் கழற்றியெடுத்தபடி, அவரிடம், “நீர் புறப்படுவதால், இந்நாளின் நினைவாக இதையாவது வைத்துக்கொள்ள என்னை அனுமதியும்” என்றாள். திவ்ய கன்னிகை அவள் செய்த இந்த அன்பின் திருட்டைக் கண்டு புன்னகைத்தபடியே தன் திருமகனுடன் மறைந்தார்கள். புனிதை தன் கரத்தில் அந்தப் பரலோக நினைவுச் சின்னத்தை இறுகப் பற்றியபடி, நீண்ட நேரம், சாஷ்டாங்கமாக விழுந்து கிடந்தாள். திருநாள்: ஜனவரி 21.

# அறிந்துகொள்வோம் பாத்திமா செய்தியை!

## தேவமாதாவின் முதல் காட்சி (தொடர்ச்சி)



*தேவ அன்னையின் முதல் காட்சி தொடர்கிறது:*

*"நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்கள்?"*

*"நீங்கள் தொடர்ந்து ஆறு மாதங்கள் 13-ஆம் தேதியில் இதே நேரத்தில் இங்கு வர வேண்டும். நான் யாரென்றும், என்ன விரும்புகிறேன் என்றும் பிறகு கூறுவேன். ஏழாவது முறையும் நான் இங்கு திரும்பி வருவேன்."*

*"நானும் மோட்சத்திற்குப் போவேனா?"*

*"ஆம், நீ போவாய்."*

*"ஜசிந்தா?"*

*"அவளும் போவாள்."*

*"ஃப்ரான்சிஸ்கோ?"*

*"அவனும் போவான். ஆனால்* **அவன் நிறைய ஜெபமாலைகள் சொல்ல வேண்டியிருக்கும்.**"

**சிந்தனை:** *இந்த இடத்தில் இரு முக்கியச் சிந்தனைகள் நம் மனதில் தூண்டப்படுகின்றன. (1) மனிதன் தம்மீதும், தமது பரலோகத்தின் மீதும் ஆசையும், ஏக்கமும் கொண்டிருக்கவும், எப்போதும் தம் நினைவாகவே இருந்து, நித்தியப் பேரின்பத்தை சுதந்தரித்துக்கொள்ளவும் வேண்டுமென்று கடவுள் விரும்புகிறார். ஆனால் இந்த ஆசையும், ஏக்கமும்தான் இன்று பெரும் பாலான மனிதர்களிடமிருந்து காணாமற் போயிருக்கின்றன. கடவுளையும், பரலோகத்தையும் நினைப்பவர்கள் மிகக் குறைவு. அப்படியே அவரை நினைத்தாலும், மிகுந்த ஆர்வத்தோடும், ஏக்கத்தோடும் அவரை அடைந்துகொள்ளத் தேவையான முயற்சிகளில் ஈடுபடுபவர்கள் இன்னும் குறைவு. மாதாவின் முதல் காட்சியில் லூசியா கேட்ட இந்தக் கேள்விகள் ஒவ்வொரு கிறீஸ்தவ னிடமும் இருக்க வேண்டிய பரலோக சிந்தனையை வலியுறுத்துபவையாக இருக்கின்றன.*

*(2) பாத்திமாவில் காட்சி தந்த பரிசுத்த ஜெபமாலை இராக்கினியை பிரான்சிஸ்கோ முதலில் காணவில்லை. லூசியாவும், ஜசிந்தாவும்தான் அவர்களை உடனே காணப் பேறுபெற்றார்கள். மாதாவின் அறிவுரைப்படி பிரான்சிஸ்கோ ஜெபமாலை ஜெபிக்கத் தொடங்கிய சற்று நேரத் தில்தான் அவனும் மாதாவைக் கண்டான். அவ்வாறே, ஜசிந்தாவும், லூசியாவும் மோட்சம் செல் வதற்கு தேவமாதா எந்த நிபந்தனையையும் விதிக்கவில்லை. ஆனால், பிரான்சிஸ்கோவுக்கு மட்டும் பல ஜெபமாலைகளை ஜெபிப்பதை நிபந்தனையாகத் தருகிறார்கள்.*

*பிரான்சிஸ்கோ சிறுவன்; குறும்புத்தனமுள்ளவன்; ஆனால் நல்லவன். அப்படியிருந்தும் கூட, மாசு மறுவற்றவர்கள் மட்டுமே "பரலோகத்தில் இருக்கிற நம் மாதாவைக்" காண முடியும் என்பதை இந்த நிகழ்ச்சி தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கிறது. மேலும், பரிசுத்த ஜெபமாலை யானது, மனிதர்களால் இழக்கப்பட்ட பரிசுத்ததனத்தையும், மாசற்றதனத்தையும் கூட அவர் களுக்குத் திருப்பித் தர வல்லதாக இருக்கிறது என்ற அதிசயத்திற்குரிய உண்மையும் இங்கு வலியுறுத்தப்படுவதை நாம் உணர முடிகிறது. இனி, காட்சி தொடர்கிறது.*

“அப்போது சமீபத்தில் இறந்து போன இரு பெண்களின் நினைவு எனக்கு வந்தது. அவர்கள் என் சிநேகிதிகள். என் மூத்த அக்காளிடம் நெசவு வேலை கற்றுக்கொள்வதற்காக அவர்கள் என் வீட்டுக்கு வருவது வழக்கம்.

“தஸ்நேவிஸ் மேரி ஏற்கனவே மோட்சத்தில் இருக்கிறாளா?” (இவள் 1917 பிப்ரவரி 26 அன்று இறந்தாள்.)

“ஆம், இருக்கிறாள்.”

“அமெலியா?” (இந்தப் பெண் 1917 மார்ச் 28 அன்று இறந்தாள்.)

“**அவள் உலக முடிவு வரை உத்தரிக்கிற ஸ்தலத்தில் இருப்பாள்.**”

அமெலியாவுக்குப் பதினெட்டு முதல் இருபது வயதுக்குள் இருக்கலாம்.”

**சிந்தனை 1:** பாத்திமாவில், உறுதிப்படுத்தப்படாத கத்தோலிக்க வேத சத்தியங்கள் ஏதுமில்லை. இங்கே, மிக முக்கியமானதும், பதிதர்களால் மறுதலிக்கப்படுவதுமான உத்தரிக்கிற ஸ்தலம் என்னும் சத்தியம் தேவமாதாவால் மீண்டும் ஒரு முறை நிரூபிக்கப்படுகிறது.

**சிந்தனை 2:** நமக்கு நடுக்கம் தரும் ஒரு காரியம் இங்கே வெளிப்படுத்தப்படுகிறது. அமெலியா 1899-ஆம் ஆண்டில் பிறந்திருக்கலாம். அவள் வாழ்ந்த காலத்தில் தொலைக்காட்சி, பொழுது போக்கு ஊடகங்கள், வலைத்தளம் போன்ற பாவ சந்தர்ப்பங்கள் இல்லை. மேலும், அவள் லூசியாவின் சகோதரியிடம் நெசவு கற்றுக்கொள்ள வந்ததிலிருந்து அவள் ஏழையாயிருந்தாள் என்பதும் தெளிவாகிறது. எனவே, உலக செல்வம் தரும் சோதனைகளும் அவளுக்கு இருந்திருக்க முடியாது. இருந்தும், “அவள் உலக முடிவு வரை உத்தரிக்கிற ஸ்தலத்தில் இருப்பாள்” என்று மாதா அறிவிக்கிறார்கள். இதிலிருந்து, தேவ நீதி எவ்வளவு அகோரமாகப் பாவத்தைத் தண்டிக்கிறது என்று நாம் காண்கிறோம். சோதனைகள் அதிகமில்லாத ஒரு காலகட்டத்தில், சோதனைகள் அதிகம் இருக்க முடியாத ஒரு சிறு கிராமத்தில், 18 ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்த ஒரு பெண் உலக முடிவு வரை உத்தரிக்கிற ஸ்தலத்தில் இருக்கும்படி தண்டிக்கப்படுகிறாள் என்றால், அதீத விஞ்ஞான வீக்கத்தின் விளைவான சாத்தானின் பல பாவ சோதனைக் கருவிகளின் மத்தியில் வாழ்பவர்களும், உலகக் கவலைகளால் நெரிபட்டு, கடவுளை அடிக்கடி மறந்து போகிறவர்களுமாகிய நம் நிலை என்ன?

ஆயினும், இந்தச் சிந்தனை, மாதாவே கேட்டுக்கொண்டபடி, நம் ஒவ்வொரு செயலையும் பாவப் பரிகாரமாக ஒப்புக்கொடுக்கும் வழக்கத்தை நம்மில் தூண்டுவதாக. தேவத் திரவிய அனுமானங்கள், ஜெபம், குறிப்பாக ஜெபமாலை, ஒறுத்தல், பரித்தியாக முயற்சிகள், பிறர்சிநேகச் செயல்கள், இவை மூலம் தொடர்ந்து நாம் நம் பாவங்களுக்குப் பரிகாரம் செய்தால், பரலோகத்தின் இந்த அச்சுறுத்தல் நமக்குப் பயனுள்ளதாகவே இருக்கும். மாதா தொடர்ந்து பேசுகிறார்கள்:

“கடவுளை நோகச் செய்கிற பாவங்களுக்குப் பரிகாரமாகவும், பாவிகள் மனந்திரும்பும்படியாகவும் அவர் உங்களுக்கு அனுப்ப விரும்புகிற எல்லாத் துன்பங்களையும் தாங்கிக்கொள்ளும்படி, அவருக்கு உங்களைக் கையளிக்க நீங்கள் விரும்புகிறீர்களா?”

“ஆம், விரும்புகிறோம்.”

“அப்படியானால் நீங்கள் அதிகம் துன்பப்பட நேரிடும். ஆனால் கடவுளின் வரப்பிரசாதம் உங்களுக்கு ஆறுதலாக இருக்கும்.”

**சிந்தனை:** உலகத்தைச் சேர்ந்தவர்கள், ஏன், கத்தோலிக்கர்களில் ஏராளமானவர்களும் கூட, துன்பங்களே இல்லாத வாழ்வுதான் கடவுளின் ஆசீர்வாதம் என்று நம்புகிறார்கள். துன்பங்கள் கடவுளின் சாபங்களாகப் பார்க்கப்படுகின்றன. சத்தியத்தை அறிந்திருப்பவர்களும் கூட, துன்பம்

*வந்தவுடன் அதை வெறுத்து, எப்படியாவது அதிலிருந்து வெளிவரத் துடிக்கிறார்கள். ஆனால் தாமே சத்தியமானவர் இதற்கு நேர்மாறானதைப் போதிக்கிறார்:*

*“யாதொருவன் என் பிறகே வர மனதாயிருந்தால், தன்னைத்தானே பரித்தியாகஞ் செய்து, தன் சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைப் பின்செல்லக் கடவான்” (மத்.16:24); “நீங்கள் புலம்பி அழுவீர்கள்; உலகமோ சந்தோஷப்படும்; நீங்கள் துக்கப்படுவீர்கள்; ஆனால் உங்கள் துக்கம் சந்தோஷமாக மாறிப் போகும்” (அரு.16:20) என்கிறார் அவர். அவரது அப்போஸ்தலரும், “நாம் சர்வேசுரனுடைய சுதந்தரக்காரரும், கிறீஸ்துநாதருக்கு உடன் சுதந்தரக்காரருமாய் இருக்கிறோம். ஆயினும் அவரோடு மகிமையடையும்படி அவரோடுகூடப் பாடுபட்டால்தான் அப்படி இருப்போம்” என்கிறார் (உரோ. 8:17). துன்பங்களின் வழியாகவே நம் ஆண்டவர் நம்மை இரட்சித்தார். துன்பங்களை வெறுப்பவன் பரலோகத்திற்குத் தகுதியற்றவன். ஆயினும், துன்பத்திலிருந்து விடுவிக்கப்படும்படி ஜெபிப்பதிலிருந்து நாம் தடுக்கப்படவில்லை என்பதற்குக் கிறீஸ்துநாதரும் (மத்.26:39), அர்ச். சின்னப்பரும் (2 கொரி. 12:8) நமக்கு மாதிரிகையாயிருக்கிறார்கள்.*

*இதில் மற்றொரு இரகசியமும் உண்டு: நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், கடவுள் நமக்குக் குறித்துள்ள துன்பத்தை நாம் தவிர்ப்பது மிகவும் அரிது. எனவே, நம்மால் தவிர்க்க முடியாத துன்பத்தை, நம்முடையவும், நம்மைச் சேர்ந்தவர்களுடையவும் நித்திய ஈடேற்றத்திற்காக, பொறுமையோடு தாங்கிக்கொள்ளும்போது, துன்பம் நமக்கு ஆதாயமாகும். பாத்திமா மாதா வாக்களிப்பதுபோல, அப்போது, “கடவுளின் வரப்பிரசாதம் நம்மைத் தேற்றும்.” (தொடரும்.)*

---

## திடதைரியமுள்ள வேதசாட்சியான அர்ச். செபஸ்தியார்!

தனக்கு நெருக்கமாயிருந்த செபஸ்தியார் ஒரு கிறீஸ்தவர் என்பதைப் பேரரசன் தியோக்ளேசியன் 286ஆம் ஆண்டில் கண்டுபிடித்தான். புனிதருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. மற்ற கிறீஸ்தவர்களை அச்சுறுத்தும் விதமாக தண்டனை பகிரங்கமாகவும், கொடூரமாகவும் நிறைவேற்றப்படவும் அரசன் ஆணையிட்டான். செபஸ் தியார் ஒரு கம்பத்தில் கட்டப்பட்டு, கண்கள் மறைக்கப்பட்டார். வில் வீரர்கள் அரச உத்தரவுப்படி அவரது உடலை அம்புகளால் சல்லடையாகத் துளைத்தபின், இறந்து விட்டாரென்று கருதி, அவரை விட்டுச் சென்றார்கள். அவரோ இறக்கவில்லை. ஐரீன் என்ற ஒரு பக்தியுள்ள பெண் அவரது சரீரத்தை அடக்கம் செய்ய வந்தபோது, அவர் உயிரோ டிருந்ததைக் கண்டாள். அவள் தந்த சிகிச்சையில் புனிதர் முழு குணம் பெற்றார்.

விசுவாச வீரமிக்க புனிதர் மீண்டும் அரசன் முன் போய் நின்று, கிறீஸ்தவர்களுக்கு எதிராக அவன் காட்டி வந்த கொடூர குணத்தைக் கடுமையான வார்த்தைகளில் கண்டித்தார். அவர் அரசனை நோக்கி: “நான் சொல்வதைக் கேளும், அரசே! உம் கோவில் பூசாரிகள் கிறீஸ்தவர்களுக்கு எதிரான தங்கள் தீய பொய்களால் உம்மை ஏமாற்றுகிறார்கள். நாங்கள் பேரரசின் எதிரிகள் என்று அவர்கள் உம்மிடம் கூறுகிறார்கள். ஆனால் எங்கள் ஜெபத்தால்தான் உமது பேரரசு இன்றும் வளங்கொழிக்கிறது. எங்களுக்கு எதிரான உம் அநியாயமான வேத கலாபனைகளை இத்துடன் நிறுத்திக்கொள்ளும். சகலத் தையும் அறிபவரும், சர்வ வல்லபருமான நித்திய நடுவரால் நீர் தீர்வையிடப்படும் காலமும், நாளும் அண்மையில் உள்ளன என்பதை நினைவில் வையும்” என்று கூறி அவனைக் கண்டித்தார் (*The Acts of the Early Martyrs*, Fastré S.J.).

அரசன் அவருடைய துணிவைக் கண்டு ஒருங்கே வியப்பும், கோபவெறியும் கொண்டான். இந்த முறை செபஸ்தியார் தடிகளால் அடித்தே கொல்லப்பட்டு, சாக்கடையில் வீசப்பட்டார். பின்னர் அவர் லூசினா என்னும் ஒரு பரிசுத்த பெண்ணுக்குத் தோன்றி, தம் திருச்சரீரத்தைச் சாக்கடையிலிருந்து எடுத்து, கலிஸ்துஸ் சுரங்கக் கல்லறையில் அதை அடக்கம் செய்யும்படி கூற, அன்றிரவே அவளும் அதைச் செய்து முடித்தாள். பின்னாளில் அவரது கல்லறையின்மீது கட்டப்பட்ட பேராலயம் இன்று ஒரு மிகப் பிரசித்தி பெற்ற திருயாத்திரை ஸ்தலமாக இருக்கிறது.

**திட தைரியமிக்க வேதசாட்சியான அர்ச். செபஸ்தியாரே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்!**

# சேசுவின் திருநாமத்தின் வல்லமை



சேசுவின் திருநாமம் ஒரு எல்லாம் வல்ல ஜெபம். தமது திருநாமத்தில் பிதாவிடம் கேட்பதையெல்லாம் நாம் பெறுவோம் என்று நமது ஆண்டவரே நமக்கு வாக்களித்துள்ளார்.

ஆகவே, நாம் "**சேசு**" என்று சொல்லும்போது, நம் ஜெபம் கேட்கப் படும் என்ற முழு நம்பிக்கையோடு நமக்குத் தேவையான அனைத்தையும் சர்வேசுரனிடம் கேட்க வேண்டும். எனவேதான் ஒவ்வொரு மன்றாட்டையும் "சேசுகிறீஸ்துவின் நாமத்தினால்" என்று திருச்சபை முடிக்கிறது.

ஆனால் இந்தத் திவ்ய நாமம் இன்னும் பெரிதான ஒன்றாக இருக்கிறது: நாம் "**சேசு**" என்று உச்சரிக்கும் ஒவ்வொரு தடவையும், நாம் கடவுளுக்கு அதி உன்னத சந்தோஷத்தையும், மகிமையையும் அளிக்கிறோம். ஏனென்றால் நாம் அவருக்கு சேசுவின் பாடுகள் மற்றும் மரணத்தின் அதிமிக அளவிட முடியாத பேறுபலன்களையும் இதன் மூலமாக ஒப்புக்கொடுக்கிறோம்.

"**சேசு**" இந்தத் திருநாமத்தைத் தம் பாடுகள் மற்றும் மரணம் வழியாகவே சம்பாதித்தார்" என்று அர்ச். சின்னப்பர் நமக்குக் கூறுகிறார். நாம் "**சேசு**" என்று உச்சரிக்கும்போதெல்லாம், உலகெங்கும் நிறைவேற்றப்படும் பூசைகளை, நமது கருத்துக்களுக்காக கடவுளுக்கு ஒப்புக் கொடுக்கும் நம் விருப்பத்தை நாம் தெளிவாக வெளிப்படுத்த வேண்டும். இவ்வாறு செய்வதால் பல்லாயிரக்கணக்கான திவ்ய பலிபூசைகளில் பங்கடையும் பேறு நமக்குக் கிடைக்கிறது.

நாம் "**சேசு**" என்று உச்சரிக்கும்போதெல்லாம், 300 நாள் ஞானப் பலன் நமக்குக் கிடைக்கிறது. அந்தப் பலனை நாம் உத்தரிக்கிற ஆன்மாக்களுக்குத் தந்து, மிகக் கொடிய வேதனையுள்ள அந்த ஸ்தலத்திலிருந்து அவர்களை நாம் விடுவிக்கிறோம். இவ்வாறு செய்வதால் அவர்கள் நமக்கு மிகவும் வேண்டிய நண்பர்களாக, நேச ஆர்வத்தோடு நமக்காக ஜெபிப்பவர்களாக மாறுகின்றனர்.

நாம் "**சேசு**" என்று உச்சரிக்கும்போதெல்லாம், அது கடவுளுக்கு சேசுவின் உன்னதமான, அளவிட முடியாத நேசத்தை ஒப்புக்கொடுப்பதால், அது உத்தமமான நேசத்தின் செயலாகிறது,

சேசுவின் திவ்ய நாமம் எண்ணற்ற தீமைகளிலிருந்தும், எப்போதும் நமக்கு தீமை செய்யும் நோக்கத்தில் திரியும் பசாசின் சக்தியிலிருந்தும் நம்மைக் காப்பாற்றுகிறது. மேலும், சேசுவின் நாமம் நமக்குத் தரும் பலத்தால் துன்பங்கள் இலகுவாகவும், தாங்கக் கூடியவையுமாய் ஆகின்றன,

வார்த்தைகளிலும், வேலைகளிலும், நாம் செய்யும் எதையும் **சேசுவின் நாமத்திலே** செய்ய அர்ச். சின்னப்பர் கற்பிக்கிறார். "வார்த்தையினாலாவது கிரியையினாலாவது நீங்கள் எதெதைச் செய்தாலும், அவையெல்லாம் ஆண்டவராகிய **சேசுக்கிறீஸ்துவின்** நாமத்தினாலே செய்யுங்கள்" (கொலோ. 3:17).

இவ்வாறு செய்வதால், ஒவ்வொரு செயலும் நேசத்தின் செயலாகவும், பேறுபலன்களின் செயலாகவும் ஆகிறது. மேலும் நாம் எல்லாச் செயல்களையும் உத்தமமாகவும், நன்றாகவும் செய்யத் தேவையான வரப்பிரசாதத்தையும், உதவியையும் கடவுளிடமிருந்து பெறுகிறோம்.

இதை மனதில் ஒவ்வொரு தடவையும் நிலைநிறுத்திக் கொள்ளுங்கள்: பக்தியுடன் "சேசு" என்று உச்சரிக்கும்போது : 1) கடவுளுக்கு நாம் மிகுந்த மகிமை அளிக்கிறோம். 2) பெரிய வரப் பிரசாதங்களை நமக்காகப் பெற்றுக் கொள்கிறோம். 3) மேலும் உத்தரிக்கிற ஸ்தலத்தில் உள்ள ஆன்மாக்களுக்கு உதவி செய்கிறோம். 4) பல பூசைகளில் பங்கடையும் பேற்றைப் பெறுகிறோம்.

# ஆத்தும இரட்சணியமே வாழ்வின் ஒரே நோக்கம்!

**"மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக்கொண்டாலும், தன் ஆத்துமம் சேதப்பட்டால் அவனுக்குப் பிரயோசனமென்ன? அல்லது தன் ஆத்துமத்துக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்பான்?"** *(மத். 16:26).*

*கடவுள் மண்ணினின்று மனிதனின் சரீரத்தை உண்டாக்கித் தமது உயிர் மூச்சையே அவனுக்கு ஆத்துமமாகத் தந்து, இவ்வாறு அவனைத் தம் சாயலாகவும், பாவனையாகவும் படைத்தார். இவ்வாறு, மனிதன் ஆத்துமமும், சரீரமும் உள்ள ஒரு முழு மனிதனாயிருக்கிறான்.*



**உன் தேர்வு: மோட்சமா நரகமா?**

**மரணம்:** *நாம் எந்த வயதில் இறந்தாலும், நம் சரீரத்திலிருந்து ஆத்துமம் பிரிந்து கடவுளின் தீர்ப்புக்குச் செல்கிறது. அது நரகமோ, மோட்சமோ, உத்தரிக்கிற ஸ்தலமோ இருக்கலாம். இது சரீரத்தின் மரணம். மற்றொன்று, ஆத்தும மரணமாகும். ஆன்மா சாவான பாவம் கட்டிக்கொள்ளும்போது (கடவுளின் கட்டளையை முழு அறிவோடும், முழு மன சம்மதத்தோடும், ஒரு கனமான காரியத்தில் மீறுவதே சாவான பாவம். இவற்றில் ஒன்று குறைந்தாலும், அது சாவான பாவமாகாது.), அது தேவ உயிராகிய தேவ இஷ்டப்பிரசாதத்தை இழந்து, செத்துப் போகிறது.*

*மனிதன் தாயின் வயிற்றிலோ, பிறந்தவுடனேயோ, குழந்தைப் பருவத்திலோ, வாலிப வயதிலோ, முதுமையிலோ சாகக் கூடும். நோய், விபத்து, கொலை, இயற்கைச் சீற்றங்கள், மூப்பு போன்ற எதுவும் மரணத்திற்குக் காரணமாகலாம். இவ்வுலகில் மரணம் ஒன்று மட்டுமே நிச்சயமானது. சாகும் ஒரு மனிதனுக்கு மற்ற எதையும் விட முக்கியமானது அவன் தேவ இஷ்டப்பிரசாத அந்தஸ்தில் சாவது, அதாவது, ஆத்துமத்தில் சாவான பாவம் இல்லாதிருக்கும்படி பாவசங்கீர்த்தனத்தால் தன்னைப் பரிசுத்தப்படுத்தி, சர்வேசுரனுடைய பிள்ளையாய் மரணத்தை எதிர்கொள்ளும் ஆத்துமம் மோட்ச இராச்சியத்தைத் தனக்கு உறுதிப்படுத்திக்கொள்ளும். ஆனால் சாவான பாவத்தோடு இறக்கும் ஆத்துமம் நித்திய நரகத்திற்குத் தீர்ப்பிடப்படும்.*

## ஞான நன்மைகள்

*குருத்துவமோ, துறவறமோ, இல்லறமோ, எதுவாயினும், பாப்பரசரோ, மேற்றிராணியாரோ, குருவோ, துறவியோ, கன்னிகையோ, விசுவாசியோ, பணக்காரனோ, ஏழையோ, படித்தவனோ, படிக்காதவனோ, யாரானாலும், மரணம் மட்டுமே நமக்கு உறுதியான, தவறாத காரியமாயிருக்கிறது.*

*எந்த ஒரு ஜீவிய அந்தஸ்திலும், நம் ஆத்துமத்தின்மீது பொழியப்பட்டுள்ள தேவ இஷ்டப் பிரசாதத்தை நாம் காத்துக்கொள்ள ஏதுவாக, திருச்சபை குறைந்த பட்சம் வாரம் ஒரு முறை கல்வாரிப் பலியில் (திவ்ய பலிபூசையில்) பங்குபெறவும், அடிக்கடி (பாவசங்கீர்த்தனம், திவ்ய நன்மை என்ற) தேவத்திரவிய அனுமானங்களைப் பெறவும் நம்மை ஏவுகிறது. பிறப்பிலிருந்து, மரணம் வரை, நம் வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும், நமக்குத் தேவையான வரப்பிரசாதங்களைத் தந்து, நம் ஆத்துமத்தை மோட்சத்திற்கு வழிநடத்த, அது குருக்களை அபிஷேகம் செய்து வருகிறது.*

## இவ்வுலக நன்மைகள்

*நம் ஆத்துமங்களுக்கு மட்டுமின்றி, கடவுள் நம் சரீரத்திற்கு அவசியமான நன்மைகளைத் தருவதிலும் எப்போதும் கண்ணுங் கருத்துமாயிருக்கிறார். உணவு, உடை, இருப்பிடம், காற்று,*

சூரிய ஒளி, சூரிய வெப்பம், கல்வியறிவு உட்பட நமக்குத் தேவையான இவ்வுலக நன்மைகளை நமக்குத் தொடர்ந்து வழங்கி வருகிறார். ஒரு நல்ல தந்தையாக இருந்து, தம் குழந்தைகளாகிய நம்மை ஒவ்வொரு கணமும் பராமரிக்கிறார்; நம் வாழ்வின் கடைசி நொடி வரை அளவற்ற அன்போடு அவர் நம்மைப் பராமரிக்கிறார்.

**நம் கடமை**

நாம் கடவுளுக்குப் பிரியமாக வாழ்கிறோமா என்ற ஆத்தும சோதனை நமக்கு முக்கியம். மன்ரேஸா புத்தகம் நமக்குக் கூறுவதாவது: "ஆத்துமத்தை இழந்துபோவது பெரிய நஷ்டம், எவ்வகையிலும் ஈடுசெய்ய முடியாத நஷ்டம். இந்த நஷ்டத்தை மாற்றவோ, குறைக்கவோ முடியாது. ஓரிடத்தில் நீ தோல்வி அடைந்தால் வேறோரிடத்தில் அல்லது இன்னொரு முறையில் வெற்றி பெறலாம். விவசாயிகள் ஒரு வருடம் விளைச்சல் இல்லையென்றால் இன்னொரு வருஷம் நல்ல விளைவு உண்டாக, நஷ்ட ஈடு பெறுவார்கள். நீ செய்யும் வியாபாரத்தில் ஒரு முறை உனக்கு மோசம் வந்தால் மறு முறை லாபம் அடையும்படி வழி தேடுவாய். ஆத்தும இரட்சணிய அலுவலிலோ, ஒரு முறை நஷ்டம் அடைந்து உன் ஆத்துமம் நரகத்துக்குப் போனால், இந்த நஷ்டம் எந்த வகையிலும் சரிசெய்து கொள்ள முடியாத நஷ்டமாகும். இதற்கு ஈடாக யாதொன்றும் கொடுக்க எந்த சிருஷ்டியாலும் முடியாது. அன்றியும் உனக்கு ஒரே ஆத்துமம் மாத்திரம் இருப்பதால், அது கெட்டு சேதமானால் எல்லாம் கெட்டு சேதமாய்ப் போகும்.

"ஐயோ! கிறீஸ்தவர்களுக்குள் எத்தனை பேர் அவசியமான இந்த ஒரே அலுவலைக் கவனியாமல், தங்களுக்கு ஆத்துமமே இல்லை என்பது போல அதைப்பற்றி நினையாமல் அஞ்ஞானிகளிலும் மோசமாய்க் காலம் போக்குகிறார்கள்! சகோதரரே! உங்கள் ஆத்துமத்துக்காக நீங்கள் செய்வது மிகக் கொஞ்சம்! அதையும் எவ்வளவு அசமந்தத்தோடும், கட்டாயத்தாலும், அரைகுறை மனதோடும் செய்கிறீர்கள்! உங்கள் ஆத்துமத்தை ஈடேற்றினால் வரும் பலனும் பாக்கியமும் உங்களுக்கல்லவா நித்திய காலமிருக்கும்? உங்கள் ஆத்துமத்தை இழந்துபோனால் நீங்கள்தானே நித்தியமான துன்பம் அனுபவிக்க வேண்டும்? லாபமும் நஷ்டமும் எல்லாம் உங்களை அல்லவா சாரும்? சமயம் வாய்க்கும்போதே அதை வீணில் இழந்து போகாமல் நல்ல மனதோடு துணிந்து, என் ஆத்துமத்தை எவ்விதமாகிலும் நான் இரட்சிப்பேனென்று துவக்குங்கள்.

"ஓ! சர்வேசுரா! என் ஆத்துமத்தை நானே இரட்சிக்கும்படி என்னை மனிதனாய் சிருஷ்டித்தீர், உமது சாயலான ஆத்துமத்தை எனக்குக் கொடுத்தீர். தேவதூதரை எனக்குக் காவல் சம்மனசாக நியமித்தீர். நீரே எனக்காக மனிதனாய்ப் பிறந்தீர். உமது திரு இரத்தத்தை என் ஆத்துமத்தின் விலையாய்த் தந்தீர். என்னைச் சூழ்ந்திருக்கும் சகல சிருஷ்டிகளும், நான் உமக்கு ஊழியம் செய்து என் ஆத்துமத்தை இரட்சிக்கும்படி இடைவிடாமல் எனக்குக் கற்பிக்கின்றன. இது வரை நான் இந்த உன்னத அலுவலை மறந்து, மற்றதெல்லாம் செய்து வந்தேன். ஓ! அக்கிரமமாய் நடந்தேன். இனிமேல் இப்படி நடக்க மாட்டேன். எனக்கு இன்னும் மீதியாயிருக்கும் நாட்களை உமக்கு ஊழியஞ் செய்து என் ஆத்துமத்தை ஈடேற்றுவதில் செலவழிப்பேன். இது என் உறுதியான மனது. இதுவே என் மாறாத ஆசை. இதுவே என் உறுதியான பிரதிக்கினை!

"அர்ச். மரியாயே, பாவிகளின் தஞ்சமான தாயே! என் தீர்மானத்தை ஆசீர்வதித்தருளும். என் ஆசையை ஏற்றுக்கொள்ளும். என் மனதை பலப்படுத்தும் தாயே. ஆமென்" (மன்ரேஸா, முதல் நாள், மூன்றாம் தியானம்).

மரியாயே வாழ்க!

# அறிந்துகொள்வோம் கத்தோலிக்க வேத சத்தியங்களை!

# 1. திவ்ய பலிபூசை



**''சேசுக்கிறீஸ்துநாதர் சுவாமி திருச்சிலுவைப் பலியைப் புதுப்பித்து, குருவின் வடிவில் நின்று, அப்ப, இரசக் குணங்களுக்குள் தமது சரீரத்தையும் இரத்தத்தையும் பலியிட்டு பிதாவாகிய சர்வேசுரனுக்குப் பாவப் பரிகாரப் பலியாக ஒப்புக்கொடுப்பதே திவ்ய பலிபூசையாகும்''** என்று திவ்ய பலிபூசையைத் திரிதெந்தீன் பொதுச் சங்கம் வரையறுத்தது. இதன்படி:

*1.* பூசை என்பது ஒரு **பலிச் செயல்;** *2.* அது விசுவாசிகளின் **பாவங்களுக்குப் பரிகாரமாக** ஒப்புக்கொடுக்கப்படுகிறது; *3.* **சேசுநாதரே** அதை ஒப்புக்கொடுக்கிறார்; *4.* **தமது வரப்பிரசாதச் செயல்முறை** மூலம் அவர் அதைச் செய்கிறார்; *5.* அப்ப, இரசம் சேசுநாதரின் திருச்சரீரமாகவும், இரத்தமாகவும் மாறும் **பொருண்மை மாற்றம்** (Transubstantiation) பூசையில் நிகழ்கிறது. *6.* அது **பிதாவாகிய சர்வேசுரனுக்கு** ஒப்புக்கொடுக்கப்படுகிறது; *7.* 'விசுவாசிகள்' பங்குபெறுவது பூசை நிறைவேறுவதற்கு ஒரு நிபந்தனை அல்ல. குருவானவர் தனியாக பூசை நிறைவேற்றும்போதும் அதில் பாவப் பரிகாரப் பலி நிறைவேறுகிறது. இந்த ஏழு அம்சங்களில் ஒன்று குறைவுபட்டாலும், அந்த வெற்று வழிபாடு, திவ்ய பலிபூசையாக இருக்க முடியாது.

புதிய பூசையை (பிரதேச மொழிப் பூசையை) அமல்படுத்தும்படி வெளியிடப்பட்ட 'நளளனமு□முகடீஆய முஹமியியர்ள' (பொதுப் போதனையின்) பிரிவு 7-ல் புதுப்பூசை பற்றிய வரை யறையின்படி: **''ஆண்டவரின் இராவுணவு அல்லது பூசை என்பது, அவரது நினைவைக் கொண்டாடும்படி, ஒரு குருவின் தலைமையில் ஒன்றுகூடும் இறைமக்களின் திருக்கூட்டம் ஆகும். இந்தக் காரணத்தால் 'எங்கே இருவர் அல்லது மூவர் என் நாமத்தினால் கூடியிருக்கிறார்களோ, அங்கே அவர்கள் மத்தியில் நான் இருக்கிறேன்' என்ற கிறீஸ்துவின் வாக்குறுதி இத்தகைய உள்ளூர்த் திருக்கூட்டத்திற்கு மிகச் சிறப்பாகப் பொருந்துகிறது.''**

இந்த வரையறையில் பூசை பற்றிய அடிப்படையான கத்தோலிக்க சத்தியங்கள் ஒன்றுகூட இல்லை. ஆனால் தேவையற்றவையும், வேண்டுமென்றே சேர்க்கப்பட்டவையுமான ப்ரொட்டஸ்டாண்ட் பதிதக் கொள்கைகளைப் புதுப்பூசை தன்னுள் முழுமையாக உள்ளடக்கியுள்ளது என்பதற்கு ஒரு தெளிவான சான்றாக இந்த வரையறை உள்ளது. இந்த வரையறையின்படி:

*1.* புதுப் பூசை ஒரு பலிச்செயல் அல்ல; *2.* அது விசுவாசிகளின் பாவங்களுக்குப் பரிகாரமாக ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை; *3.* இதை நடத்துபவர் சேசுநாதர் அல்ல. இறை மக்களே. *4.* குரு பலி நிறைவேற்றவில்லை. அவர் திருக்கூட்டத்திற்குத் தலைமை தாங்குகிறார், அவ்வளவே; *5.* பொருண்மை மாற்றம் அதில் நிகழ்வதில்லை. *6.* அது பிதாவுக்கு ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை. *7.* இறைமக்களின் திருக்கூட்டமே பூசை. அவர்கள் இன்றி புதுப்பூசை நிறைவேற்ற இயலாது. புதுப் பூசை உண்மையானபூசையே அல்ல என்று நிருபிக்க இந்தத் தப்பறைகளே போதுமானவை.

இந்தத் தப்பறைகள் புதுப் பூசையின் ஒவ்வொரு கட்டத்திலும், அதன் ஒவ்வொரு ஜெபத்திலும், அடையாளங்களிலும் முழுமையாக வெளிப்படுகின்றன. குரு பலியின் அடையாளங்களான ஆமிஸ், ஆல்ப், சிங்ச்சர், ஸ்தோல், மானிப்பிள் ஆகியவற்றை அணிவதில்லை. பீடத்தின் மூன்று லினன் விரிப்புகள் மறைந்து விட்டன. பலி ஒப்புக்கொடுக்கப்படாததாலும், ஆகவே, பலி

ஒப்புக்கொடுப்பவரும், பலியாகிறவருமான சுதனாகிய சர்வேசுரனுக்கும், அதை ஏற்றுக்கொள்பவரான பிதாவாகிய சர்வேசுரனுக்கும், பலிப்பொருட்களை அர்ச்சிக்கும் இஸ்பிரீத்துசாந்துவானவருக்கும் புதுப் பூசையில் எந்த வேலையுமில்லை என்பதாலும், மக்களே பூசை என்பதாலும், குரு பீடத்திற்கு (கடவுளுக்கு) முதுகு காட்டி, மக்களை நோக்கித் திரும்பி நிற்கிறார்; விசுவாசிகள் சேசுநாதரின் வழியாகவே, அவரது பிரதிநிதியான குருவின் வழியாகவோ அன்றி, நேரடியாகக் கடவுளிடம் ஜெபிக்கிறார்கள் (விசுவாசிகளின் மன்றாட்டு). தேவ வசீகர வார்த்தைகள் மாற்றப்பட்டு விட்டன. பூசை ஜெபங்களில் பல அகற்றப்பட்டு விட்டன. தினமும் மாறக்கூடிய பிரவேச வாக்கியம், சபைச் செபம், அமைதி மன்றாட்டு, உட்கொள்ளுதல் வாக்கியம், உட்கொண்டபின் ஜெபம் ஆகியவற்றிலிருந்து நரகம், பாவப் பரிகாரம், பாவங்களுக்குரிய தண்டனை, அர்ச்சிய சிஷ்டவர்கள் வணக்கம், உத்தரிக்கிற ஸ்தலம், தேவமாதா பற்றிய சத்தியங்கள் போன்ற இன்னும் பல சத்தியங்கள் பற்றிய வார்த்தைகள் மிகப் பெருமளவு அகற்றப்பட்டு விட்டன.

இவை அனைத்திற்கும் மேலாக, திரிதெந்தீன் திவ்ய பலிபூசையை நித்திய வழிபாடாகத் திருச்சபைக்கு வழங்கிய அர்ச். ஐந்தாம் பத்திநாதர், அதை அமல்படுத்தும்படி தாம் வெளியிட்ட "குவோ ப்ரிமும்" என்னும் ஆணை மடலில், "...நம்மால் வெளியிடப்படும் இந்தப் பூசைப் புத்தகத்தில் உள்ள சடங்கு ரீதிப்படி அல்லாமல் வேறு எந்த முறைப்படியும் பாடற்பூசைகளோ, சாதாரணப் பூசைகளோ செய்யப்படக் கூடாது. . . வேறு பூசைப்புத்தகங்களைப் பயன்படுத்துவது மொத்தமாகவும், முற்றிலுமாகவும் நிறுத்தப்பட வேண்டும். இது முதல், இனி என்றென்றும், நாம் இப்போது வெளியிட்டுள்ள இந்தப் பூசைப் புத்தகத்தோடு எதுவும் சேர்க்கப்படக்கூடாது, அதிலிருந்து எதுவும் விலக்கப்படக் கூடாது, அதில் எதுவும் மாற்றப்படக் கூடாது என்று நாம் உத்தரவிடுகிறோம். அப்படிச் செய்யத் துணிபவர்கள் நம் தண்டனைக்கு உள்ளாவார்கள். . .

மேலும், இது முதல் மனச்சான்றின் எந்த உறுத்தலோ, அல்லது தண்டனை, தீர்ப்பு அல்லது தடைக்கு உள்ளாவது பற்றிய எந்த பயமோ இன்றி, இந்தப் பூசைப் புத்தகம் பயன்படுத்த வேண்டும் என்பதை நாம் நம் அப்போஸ்தலிக்க அதிகாரத்தைக் கொண்டு நித்திய சலுகையாக வழங்கு கிறோம்... இந்தப் பூசைப் புத்தகத்தை மாற்றும்படி யாரும் கட்டாயப்படுத்தப்படக் கூடாது, இந்த ஆணைப் பத்திரம் ரத்து செய்யப்படவோ, மாற்றியமைக்கப்படவோ இயலாது, அது என்றென் றும் செல்லத்தக்கதாக நிலைத்திருக்கும் என்றும், இதற்கு முந்தைய எந்த திருச்சபை அதிகார ஆணைகளையும் மீறி இது என்றென்றும் சட்டத்தின் முழு வலிமையைக் கொண்டிருக்கும் என்றும் நாம் அறிக்கையிட்டு, நியமனம் செய்கிறோம்" என்றும் கட்டளையிட்டிருக்கிறார்.

ஆனால் புதுப் பூசை பரீட்சார்த்த முறையிலேயே அறிமுகப்படுத்தப்பட்டது. "பொதுப் போதனையில்" ஆறாம் சின்னப்பர், "விசுவாசிகள் இந்தப் பூசையை ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறோம்" என்று நம்பிக்கை தெரிவிக்கிறாரே தவிர, அதை ஒரு கட்டளையாக அவர் தரவில்லை. ஏற்கெனவே கட்டளையாகத் தரப்பட்டுள்ள திரிதெந்தீன் திவ்ய பலிபூசையை ரத்துச் செய்யும் எண்ணமும் தமக்கு இல்லை என்று அவர் தெளிவுபடுத்தி விட்டார். ஏனெனில் அப்படி ரத்துச் செய்வதற்கான எந்தக் காரணத்தையும் அவரால் கூறியிருக்க இயலாது.

எனவே, திரிதெந்தீன் திவ்ய பலிபூசை கிடைக்கும் இடங்களில் உள்ளவர்கள் அதைக் காண முன்வாருங்கள்; அது கிடைக்காத இடங்களில் உள்ளவர்கள் ஞாயிறு, கடன் திருநாட்களில் பூசை மந்திரம் ஜெபித்து, ஆசை நன்மை உட்கொண்டு, உங்கள் ஞாயிறு கடனை நிறைவேற் றுங்கள். மேலும், சகல கத்தோலிக்க ஆலயங்களிலும் இந்தப் பாரம்பரியப் பூசை நிறைவேற்றப் படுமாறு திருச்சபையில் பாரம்பரியம் திரும்பி வரும்படியாக, உங்கள் ஜெப, தவ, பரித்தியாக

# தேவமாதாவின் சுத்திகரத் திருநாள்



கிறீஸ்துநாதர் சிலுவையில் உயிர்விடுமுன், ‘‘எல்லாம் முடிந்தது’’ -- நான் சகலத்தையும் நிறைவேற்றி விட்டேன். என்னைப் பற்றி எழுதப்பட்டுள்ளதெல்லாம் முழுமையாக நிறைவேறி விட்டது--என்றார். உள்ளபடி, தம் வாழ்வின் இறுதி வரை, வேதப் பிரமாணத்தை அவர் முழுமையாக நிறைவேற்றினார். இது குறித்து, ‘‘வேதப் பிரமாணத்தை அழிப்பதற்கல்ல, நிறைவேற்றவே வந்தேன்’’ என்று அவரே கூறினார் (மத்.5:17). இதில், >VµßE, ÿµ©Ã½>_ என்னும் புண்ணியங்களின் உத்தம மாதிரிகையை அவர் நமக்குத் தந்தார்.

இதே விதமாக, நம் பரிசுத்த மாதாவும், வேதப் பிரமாணத்திற்குக் கீழ்ப்படியும்படி, தனது திருமகன் பிறந்த நாற்பதாம் நாளில், ஜெருசலேம் தேவாலயத்தில் அவரைக் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கவும், இரண்டு மாடப் புறாக்களைக் காணிக்கையாகத் தரவும் வந்தார்கள்.

நமக்கு இரட்சணியம் தர வந்தவர் தம்மையே தாழ்த்தி, பரலோகத்தை விட்டு உலகிற்கு வந்து, மனிதனாய் அவதரித்து, மனித சுபாவத்தில் நமக்கு ஒப்பானார். ஓர் ஏழைச் சிறு கன்னிகையிடமிருந்து பிறக்கத் திருவுளமானார், நம்மை வளப்படுத்தி, இவ்வுலக நிர்ப்பாக்கியங்களிலிருந்து நம்மை விடுவித்து, நித்திய செல்வங்களை நமக்குத் தரும்படி அவர் நமக்காக ஏழையானார்.

பாவங்களின் நிமித்தமும், புண்ணிய செல்வங்கள் இன்றியும் ஏழைகளாக இருக்கும் நாம், தேவ கன்னிகை ஆலயத்தில் செலுத்திய மாடப் புறாக்கள் குறித்துக் காட்டும் காரியங்களை ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கும்படி இந்தத் திருநாளைக் கொண்டாடுவது தகுதியுள்ளது.

மாடப்புறா கள்ளங்கபடற்றது, எளிமையானது. இயல்பாகவே கற்புள்ளது. ஏனெனில் தன் துணை இறந்தபின், அது வேறொரு துணையைத் தேடுவதில்லை. தனது தனிமையில், அது தன் துணையை நினைத்து தனது இழப்பின் துயரப் பாடலைப் பாடுகிறது. நாமும் நம் எளிய சித்தமும், நல்ல கருத்துமாகிய இரண்டு மாடப் புறாக்களை ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். கோபமோ, வெறுப்போ, பகையோ இல்லாத, தாழ்ச்சியும், சாந்தமும் உள்ள இருதயத்தோடு நம்மையே அவருக்குக் காணிக்கையாக்க வேண்டும். மேலும், நம் **பரிசுத்த கற்பையும்**, பாவங்களை அடியோடு விட்டு விலகும் மிக உறுதியான பிரதிக்கினையையும், புறாவின் கற்புள்ள துயரக் கூவுதலாகிய **உத்தம மனஸ்தாபத்தையும்** நாம் அவருக்கு ஒப்புக்கொடுக்க வேண்டும்.

இந்தத் திருநாள் நம் திவ்ய அன்னையின் சுத்திகரத் திருநாள் எனப்படுவதன் காரணம் அவர்களுக்கு சுத்திகரம் தேவைப்பட்டது என்பதல்ல. ஏனெனில், சரீர உறவின் அசுத்தமின்றி, அற்பப் பாவக் கறையும் கூட இன்றி, இஸ்பிரீத்துசாந்துவின் வல்லமையால் தேவ சுதனைக் கருத்தரித்து, தனது கன்னிமையின் மகிமைக்குப் பங்கமின்றி அவரை ஈன்றெடுத்த இந்தப் பரலோக இராக்கினி பூரண மாசற்றவர்களாக இருக்கிறார்கள். மாறாக, தான் மாசற்றவர்களாக இருந்தாலும், சகல பெண்களிலும் தாழ்ந்தவர்களாகவே தன்னை எண்ணத் தூண்டிய உத்தம தாழ்ச்சியின் காரணமாகவே, மற்ற எல்லாப் பெண்களையும் போல, திருச்சட்டத்திற்குக் கீழ்ப்படியும்படி துப்புறவுச் சடங்கிற்கு அவர்கள் தன்னை உட்படுத்தினார்கள்.

இந்தத் தாழ்ச்சியும், சாந்தமும், கபடற்றதனமும் நம்மில் வளரும்படியாகவும், மாமரியே நம் மரணத்திற்குப் பிறகு, பரலோக மகிமையுள்ள பேரின்பத்திற்கு நம்மை அழைத்துச் சென்று, பிதா, சுதன், இஸ்பிரீத்துசாந்துவிடம் தனது காணிக்கையாக நம்மை சமர்ப்பிக்க வேண்டுமென்றும் நம் மகா பரிசுத்த திவ்ய கன்னித் தாயாரிடம் மன்றாடுவோமாக.

# சூசை பாலன் நடக்கவும், பேசவும் தொடங்குகிறார்.

**கன்னிகையான மரிய செசீலியா பெய்ஜுக்கு வெளிப்படுத்தப்பட்ட அர்ச். சூசையப்பரின் வாழ்க்கை வரலாறு என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.)**



மிக இளம் வயதிலேயே பேசவும், நடக்கவும் சூசை தேவ ஆசீரைப் பெற்றுக்கொண்டார். அவர் உச்சரித்த முதல் வார்த்தைகள், **"என் தேவனே!"** என்பவையே. வானதூதர் இந்த வார்த்தைகளைத்தான் அவருக்குக் கற்பித்திருந்தார். ஒரு நாள் அவர் விழித்தெழுந்தபோது, அவருடைய உதடுகளிலிருந்து இந்த வார்த்தைகள் வெடித்துக் கிளம்பின. அவரது பெற்றோர் பிரமிப்போடும், ஆழ்ந்த உணர்ச்சிப் பெருக்கோடும் அதைக் கேட்டு, மகிழ்ச்சியால் நிரப்பப்பட்டார்கள். குறிப்பாக, அவர் தம் முதல் வார்த்தைகளையே கடவுளை நோக்கிப் பேசியது பற்றியும், அவரது உதவியை மன்றாடுவதாக அவ்வார்த்தைகள் அமைந்தது பற்றியும் அவர்கள் மிகவும் சந்தோஷப்பட்டார்கள். சூசை இந்த வார்த்தைகளை மிக அடிக்கடி பயன்படுத்தக் குறிக்கப்பட்டிருந்தார். ஏனெனில் அவர் தமது சர்வமுமாயிருந்த கடவுளுக்குத் தம்மை முழுவதுமாகக் கையளித்திருந்தார்.

தமது பெற்றோர், ஆபிரகாம், ஈசாக், யாக்கோபின் தேவன் என்று கூறும்போதெல்லாம், "சூசையின் தேவன்" என்ற வார்த்தைகளையும் அவர் சேர்த்துக்கொள்வார். இந்த இள வயதில் இந்த வார்த்தைகளை மிகுந்த இன்பத்தோடும், எளிதாகவும் அவர் சொல்லக் கேட்பது அவருடைய பெற்றோருக்கு மிகுந்த இன்பமளித்தது. இவற்றை அவர் அடிக்கடி உச்சரிப்பதைக் கேட்பதற்காகவும், அதிலிருந்து அவர் பெறும் ஆறுதலை அவருக்குத் தருவதற்காகவும், அவர்கள் அடிக்கடி இந்த வார்த்தைகளைப் பக்தியோடு சொல்லத் தொடங்கினார்கள்.

"மற்றும் சூசையின் தேவன்" என்ற சிறுவனின் பதில்மொழி எவ்வளவு பக்தியோடு சொல்லப்பட்டது என்றால், அவரைப் பொறுத்த வரை கடவுள் "மட்டுமே ஒரே நன்மைத்தனமாக" இருந்தார் என்பதும், அவரே சிறுவனின் நாட்டங்களுக்கும், ஆசைகளுக்கும் உரியவராக இருந்தார் என்பதும், அவரைத் தவிர வேறு நினைவுகளோ, வேறு நேசமோ அவருக்கு இருக்கவில்லை என்பதும் தெளிவாயிருந்தது. கடவுளின் திருப்பெயர் உச்சரிக்கப்பட்டபோதெல்லாம் அவர் எப்போதும் சந்தோஷமும் அக்களிப்பும் உள்ளவரானார்.

இனி கடவுளுக்கு மட்டுமே தாம் எப்போதும் ஊழியம் செய்வதற்கும், தமது போக்குவரத்துகளால் ஒருபோதும் அவரை நோகச் செய்யாதிருப்பதற்குத் தேவையான வரப்பிரசாதத்திற்கான மன்றாட்டுடன் சூசை எடுத்து வைத்த முதல் காலடிகள் கடவுளுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டன. இந்த விண்ணப்பம் முன்னதாக தேவதூதரிடமிருந்து அவர் பெற்றுக்கொண்ட போதகத்தின்படி விடுக்கப்பட்டது. கடவுள் இந்த மன்றாட்டைக் கேட்டருளினார். ஏனெனில், சூசை எப்போதும் கடவுளுக்கு மகிமை செலுத்தி வந்தார், தம் பேச்சு, நடத்தை, அல்லது வேறு எந்தச் செயலாலும் அவர் கடவுளை ஒருபோதும் நோகச் செய்ததில்லை, அவரைத் துயரப்படுத்தியதுமில்லை.

தம் கண்களை பரலோகத்தை நோக்கி ஏறெடுத்து, தாம் மேற்கொள்ளும் எல்லாக் காரியங்களும், எப்போதும், கடவுளின் அதிமிக மகிமைக்காகவும் இன்பத்திற்காகவுமே செய்யப்படும்படி, தேவ உதவியையும் வரப்பிரசாதத்தையும் மன்றாடுவது சூசைக்கே உரிய வழக்கமாக இருந்தது. தாம் சாப்பிடவோ, உறங்கவோ, பேசவோ, அல்லது எங்காவது செல்லவோ தயாரானபோதெல்லாம் இதை அவர் செய்து வந்தார். தாம் செய்ய விரும்பிய எல்லாப் புண்ணியச் செயல்களையும் மிக இளவயது காரணமாக நிறைவேற்ற முடியாததால், அவர் தம் ஆசைகளைக் கடவுளுக்கு ஒப்புக் கொடுத்து வந்தார். இவற்றோடு, உண்பது, குடிப்பது, உறங்குவது போன்ற, உயிரைக் காத்துக்கொள்ள அவசியமான தமது சாதாரண செயல்கள் அனைத்தையும் அவர் சேர்த்து ஒப்புக்கொடுத்தார்.

சூசை தமது சுத்தக் கருத்தின் வழியாக, தாம் செய்யும் அனைத்தையும் கடவுளின் அன்பிற்காகச் செய்ததன் மூலம் அவை அனைத்தையும் மதிப்பு மிக்கவையாக ஆக்கிக் கொண்டார். குறிப்பாக, தேவ அன்பால், சுவையான உணவுகளைச் சில சமயங்களில் அவர் விலக்கினார். இப்படிச் செய்யும்படி தூதர் அவருக்கு அறிவுரை தந்திருந்தார். ஏனெனில் மிக இளவயதின் காரணமாக, அவர் தேவசிநேகத்திற்காகப் பெரிய காரியங்களைச் செய்ய இயலாதவராக இருந்தார்.

அவர் கடவுளுக்குத் தமது அர்ப்பணத்தை அடிக்கடி புதுப்பித்தார். அது, தேவாலயத்தில் அவர் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கப்பட்ட நேரத்தில் அவர் செய்த அர்ப்பணச் செயலின் தொடர்ச்சியாக இருந்தது. சூசையின் தாய் தன் குழந்தையில் மாபெரும் ஞான வல்லமைகளின் இந்த அடையாளங்களைக் கண்டுணர்ந்தபோது, எபிரேய முறைப்படி, கடவுளுக்கு முன் உள்ளத்து உணர்வுகளைப் பல வகைகளில் வெளிப்படுத்தும் வழக்கத்தை அவள் அவருக்குக் கற்றுத் தரத் தொடங்கினாள். சூசை இதில் அகமகிழ்ச்சியடைந்தார், இதை மிக நன்றாக அவர் தமக்கு வழக்கமாக்கிக் கொண்டதைக் கண்டு, அவரதுதாய் மட்டுமின்றி, அவரது உள்ளத்தின் ஏவுதல் மிக்க ஜெபங்களையும் துதி புகழ்ச்சிகளையும் கேட்க நேர்ந்த அனைவருமே வியந்து போயினர்.

துணையின்றி நடக்கப் பழகியதும், சூசையப்பர் அடிக்கடி மறைந்திருந்து ஜெபிக்கும் வழக்கத் தைத் தொடங்கினார். உயர்த்திய கரங்களுடன், இவ்வளவு அதிகமான நன்மைகளைத் தம் மீது குவித்துள்ளதற்காக அவர் கடவுளுக்கு நன்றி செலுத்துவார். தொடர்ந்து பல மணி நேரம் முழந் தாளில் நின்று ஜெபிப்பார். இந்த நிலையில் அவரைக் காண்பது நெகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது. தேவ இலட்சணங்களை தியானிப்பதில் அவரது ஆன்மா எப்படி இன்பம் கண்டது என்பதைக் கவனிப்பது இன்னும் அதிகம் ஆச்சரியமூட்டுவதாக இருந்தது. வெளித் தோற்றத்திலும் இதைக் காண முடிந்தது. உதாரணமாக, சிவந்து போகும் அவரது முகத்திலும், ஒளிவீசும் கண்களிலும், அவர் அனுபவிக்கும் இந்த தெய்வீக இன்பத்தை மற்றவர்கள் காண முடிந்தது. அவருடைய தாய் தன் மகனைப் பாராதபடி விவேகத்தோடு அவரிடமிருந்து தூரமாக இருந்துகொண்டாலும், "ஓ, அளவற்ற நன்மைத்தனமுள்ளவராகிய சர்வேசுரா, தேவரீர் உம் ஆசீர்வாதங்களை எவ்வளவு தாராள மாய் அடியேன் மீது பொழிந்திருக்கிறீர்! நான் உமக்கு எவ்வளவு அதிகமாக நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்!" என்று அவர் உணர்வு பொங்கக் கூறுவதை அடிக்கடி அவள் கேட்டாள். அவரது வார்த்தைகள் இன்னமும் மழலை மாறாமல் இருந்தன என்றாலும் அவை கடவுளின் மீதான நேசத் தால் பற்றியெரிந்த ஓர் இருதயத்திலிருந்து வந்தன. அவரது தாய் அவற்றைக் கேட்டபோது நேசம் மற்றும் நன்றியறிதலின் இதே உணர்வுகளால் தானும் நிரப்பப்பட்டாள். இதனால் தன் சொந்த இருதயமும் கடவுளால் ஏவித் தூண்டப்பட்டதை அவள் உணர்ந்தாள். இச்சமயங்களில் அவளிட மிருந்து அழுகை வெடித்துக் கிளம்பும். தன் மகன் கடவுளிடம் இத்தகைய தயவு பெற்றுள்ளதை யும், தேவ கொடைகளால் செழுமையான விதத்தில் நிரப்பப்பட்டுள்ளதையும் காணும் ஒரு தாயின் ஆனந்தக் கண்ணீராக அது இருந்தது.

மரியாயே வாழ்க!

# ஆன்மாவைப் பரிசுத்தப்படுத்துவதே பக்தியுள்ள வாழ்விற்குரிய முதல் அலுவல்

**அர்ச். பிரான்சிஸ் சலேசியாரின் பக்திநெறி வழிகாட்டியிலிருந்து எடுக்கப்பட்டது.**



"நம் பூமியிலே மலர்கள் மலர்ந்தன" என்று உன்னத சங்கீதத்தில் (2:12) மணவாளன் கூறுகிறார். நம்மில் அரும்பும் நல்விருப்பங்களே இம்மலர்கள். அவை அரும் பியவுடனே நம் உள்ளத்தினின்று சாவுக்குரிய வீண் செயல்கள் அனைத்தையும் நாம் தறித்துவிட வேண்டும். புறவினத்தாளான ஒரு பெண் ஓர் இஸ்ராயேலனை மணக்க விரும்பினால், அவள் முதலில் குளித்து, உடை மாற்றிப் புத்தாடைகள் அணிந்து, நகங்களை நறுக்கி, மொட்டை யடித்துக்கொள்ள வேண்டும் என்பது யூத சட்டம். தேவ சுதனுக்குப் பத்தினியாக விரும்பும் ஆன்மா பாவ வழிகளை விலக்கிப் பழைய மனிதனைத் துறந்து புது மனிதனாக மாற வேண்டும். தேவசிநேகத்துக்குத் தடையான அனைத்தையும் ஆன்மா விலக்க வேண்டும். பாவ நாட்டங்களை வெறுத்துத் தள்ளுவதே நம் ஆன்ம நலனுக்குரிய முதல் அலுவல்.

அர்ச். சின்னப்பர் ஒரே விநாடியில் புனிதமாக்கப்பட்டார். அர்ச். ஜெனோவா கத்தரீனம்மாளும், அர்ச். மரிய மதலேனம்மாளும் திடீரெனக் குணமாக்கப்பட்டவர்கள்தான். இத்தகைய திடீர் மனந்திரும்புதல்களும் தேவ வரப்பிரசாதப் புதுமைகள். இவற்றை நாம் எதிர்பார்க்கலாகாது. ஆன்ம, சரீர நன்மைகள் வழக்கமாகப் படிப்படியாய்த்தான் ஏற்படும். சிறுகச் சிறுகக் குண மடைந்து, முயற்சிகளின் பயனாகத்தான் முன்னேற்றம் காண்போம். பாவ வழியை விலக்கி, பக்தி நெறியை நாடும் ஓர் ஆன்மா விடியற்காலை வெளிச்சத்திற்கு ஒப்பாகும். வைகறையொளி சிறிது சிறிதாகத்தான் இருளை அகற்றும். பொறுமையாகக் குணமாகும் நோய்தான் முற்றும் குணமாகும்.

எனவே, பக்த வாழ்வை நாடுவோர் மிகுந்த பொறுமையோடும் அஞ்சாமையோடும் நடந்து கொள்ள வேண்டும். ஆனால் சில ஆன்மாக்கள் பக்திநெறியில் சில காலம் ஈடுபட்ட பிறகு, தங்கள் குற்றங்குறைகளைக் கண்டு சோர்வுற்று, பக்தியொழுக்கத்தையே முற்றிலும் விட்டுவிட முனைவது மிகவும் வருந்தத்தக்கது. ஒருவன் மனந்திரும்பின அன்றே தன் குற்றங்குறைகள் அனைத்தும் அறவே மறைந்து விட்டன என்று நினைப்பது மிகவும் தவறு. பக்திநெறி என்னும் ஏணியில் முதற் படியில் அடியெடுத்து வைத்த உடனே உச்சியை அடைந்து விட்டோமென்று இறுமாந்திருத்தல் மடமையாகும். சிறகின்றிப் பறந்து விடலாமென்று நினைப்பதும், துணிவதும் அறியாமை. மருத்துவரின் பராமரிப்பினின்று அவசரமாக விடுதலை வாங்கிக்கொண்ட நோயாளி மீண்டும் நோயுற்றுத் தவிப்பது இயற்கையே. "விடியுமுன் எழுந்திருப்பது வியர்த்தம்; இளைப்பாறின பின்பு எழுந்திருங்கள்" (சங்.126:3) என்று தாவீதரசர் நமக்கு எச்சரிக்கை தருகிறார். அவரே இவ்வறிவுரையைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்தார். ஏற்கெனவே பரிசுத்தமாக்கப்பட்ட அவர் மேன்மேலும் பரிசுத்தமாக்கப்படுமாறு வேண்டினார்.

நம் ஆன்மாவைப் பரிசுத்தப்படுத்தும் அலுவல் நம் மரண நேரம் வரை இடைவிடாமல் நீடிக்க வேண்டும். ஆகவே, நம் குற்றங்குறைகளைக் கண்டு மனம் கலங்குதல் தகாது. அவற்றை எதிர்த்துப் போராடுவதில்தான் புண்ணிய நெறி அடங்கியிருக்கிறது. எதிர்த்துப் போராட வேண்டுமானால், அவற்றை நாம் கண்டுபிடிக்க வேண்டும். நாம் முழு வெற்றி காண விரும்பினால்,

அவற்றை ஆராய்ந்தறிந்து எதிர்க்க வேண்டும். நம்மிடம் குற்றங்குறைகள் இருப்பதை நாமே உணராமலிருப்பதில் நமக்கு வெற்றியில்லை. குற்றங்களுக்கு இடந்தராமல் இருப்பதே உண்மை யான வெற்றி. சில வேளைகளில் அவை நம்மைக் கடுமையாக வதைக்கக்கூடும். இதைக் கண்டு நாம் தோல்வியடைந்து விட்டதாக எண்ணக் கூடாது. நாம் தாழ்ச்சியில் பயிற்சி பெறும்படி, அவ்வப்போது இந்த ஆன்ம போர்முனையில் காயப்படுதல் வேண்டும். நம் ஆன்ம உயிரையும், தைரியத்தையும் இழந்து விட்டாலன்றி நாம் ஒருபோதும் தோற்கடிக்கப்படுவதில்லை. அற்பப் பாவங்களோ, சிறு குறைகளோ நம் ஆன்ம உயிரை மாய்ப்பதில்லை. சாவான பாவத்தால் மட்டுமே ஆன்ம உயிரை இழந்து விடுவோம். ஆகவே நம் அற்பக் குற்றங்குறைகளைக் கண்டு எந்நாளும் நாம் சோர்வடைதல் கூடாது. நாம் போராடத் தயாராயிருந்தால் எப்பொழுதுமே வெற்றி பெறுவோம் என்பதுதான் இந்த ஞானப் போரின் தனிச்சிறப்பு.

## முதன்முதல் சாவான பாவங்களிலிருந்து நாம் விடுதலையாக வேண்டும்.

சாவான பாவத்தினின்றுதான் நாம் முதன்முதல் விடுதலை பெற வேண்டும். இதற்குத் துணை புரிவது **பாவசங்கீர்த்தனம்.** நல்ல ஆன்ம சோதனை செய்ய உதவும் ஒரு புத்தகத்தை வாசித்து, உனக்குப் பகுத்தறிவு வந்த நாள்முதல் இது வரை நீ கட்டிக்கொண்ட ஒவ்வொரு பாவத்தையும் கண்டுபிடி. அவற்றை நினைவில் வைத்துக்கொள்வது கடினமென்றால், காகிதத்தில் அவற்றை எழுதி வைத்துக்கொள். உன் ஆன்மாவின் காயங்களை இவ்வாறு கண்டுபிடித்ததும், அவற்றை மனமார வெறுத்து, உத்தம மனஸ்தாப முயற்சி செய். பாவத்தால் தேவ வரப்பிரசாதத்தை இழந்து, பரலோகப் பேரின்பத்தை அவமதித்து, நித்திய நரக ஆபத்துக்கு இலக்காகி, தேவ சிநேகத்தைப் புறக்கணித்ததை நினைத்து மனம் வருந்து. இத்தகைய பொதுப் பாவசங்கீர்த்தனம் எப்பொழுதும் தேவையில்லை எனினும், பக்தியுள்ள வாழ்வின் ஆரம்பத்தில் இது மிகுந்த நன்மை பயக்கும்.

## இரண்டாவது அலுவல்: பாவப் பற்றுதல்களை அறவே ஒழித்தல்

இஸ்ராயேலர் அனைவரும் எகிப்தை விட்டுப் புறப்பட்டார்கள் எனினும் அவர்களில் பலர் அந்நாட்டின் பேரில் உள்ள பற்றுதலை விடவில்லை. ஆகவே பாலைவனங்களில் எகிப்து நாட்டு இறைச்சிச் சட்டிகளை எண்ணி ஏங்கினார்கள். இவ்வாறே சிலர் பாவத்தை விட்டு விலகினாலும், அதன் மேலுள்ள பற்றுதலை விட்டுவிடுவதில்லை. இனி பாவம் செய்வதில்லை என்று பிரதிக் கினை செய்தாலும், தீய இன்பங்களை முற்றும் வெறுக்கத் தயங்குகிறார்கள். பாவ வழியை விட்டு விலகினாலும், லோத்தின் மனைவி திரும்பிப் பார்த்தது போல், இவர்களும் திரும்பிப் பார்க் கிறார்கள். வலுவற்ற கோழைகள் தயக்கத்தோடு சில காலம் பாவத்தை விட்டுவிடுவார்கள். நரகம் செல்லாமல் பாவம் செய்ய முடிந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று நினைப்பார்கள். பாவத் தைப் பற்றி ஆசையோடு பேசுவார்கள். பாவம் செய்வோர் பேறுபெற்றோர் என்று எண்ணுவார்கள்.

பாவத்தை வெறுத்த பிறகும் பாவப் பற்றுதல்களை வைத்து வளர்க்கும் மனிதர்கள் நோய் வாய்ப்பட்டு மீண்ட நடைப் பிணங்களுக்கு ஒப்பாவார்கள். இந்த எலும்புக்கூடுகள் படுத்த படுக்கையாயில்லை எனினும் வலுவற்றவர்களாகவே இருப்பார்கள். இவ்வாறே பாவப் பற்றுதல் களினால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்கள், மிகவும் சிரமப்பட்டுத்தான் ஒரு சில நற்செயல்ளைச் செய்ய முடியும். அந்த நற்செயல்களும் பயன் தராது. எனவே, பக்தியுள்ள ஆன்மாவே, நீ பாவத்தை விட்டு விலகுவது மட்டும் போதாது. பாவத்திற்குரிய பற்றுதல்கள் அனைத்தையும் அறவே ஒழிக்க வேண்டும். மறுமுறையும் பாவத்தில் விழ இந்தப் பற்றுதல்கள் காரணமாயிருக்கும். புண்ணியச் செயல்களைக் கவனமாகவும், சுறுசுறுப்பாகவும் அடிக்கடி செய்வதில்தான் பக்தி யொழுக்கம் அடங்கியிருக்கிறது.

மரியாயே வாழ்க!

# கத்தோலிக்கத் திருச்சபையில் விவாகரத்து அனுமதிக்கப்படுகிறதா?




மெய்விவாகம் என்பது திருமணம் செய்துகொள்பவர்களுக்குத் தேவ ஆசீர்வாதத்தையும், அவர்கள் பரிசுத்தமாய் நடக்கவும், தங்கள் பிள்ளைகளை முறைப்படி வளர்க்கவும் தேவையான தேவ உதவியையும் தரும் தேவத்திரவிய அனுமானம் ஆகும்.

**ஏகத்துவம்** (Unity), **இணைபிரியாத ஐக்கியம்** (Indissolubility) ஆகியவை மெய்விவாகத்தின் முக்கிய இலட்சணங்களாகும். கிறீஸ்தவர்களுக்குள் நடைபெறும் திருமணம் தேவத் திரவிய அனுமானமாயிருப்பதால், இந்த இரு இலட்சணங்களும் விசேஷ உறுதியை அடைகின்றன. ஒரே காலத்தில் ஒரு மனிதன், ஒரே மனைவியோடும், ஒரு மனைவி ஒரே கணவனோடும் வாழ வேண்டும் என்பதையே ஏகத்துவம் என்கிறோம். கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள ஐக்கியம் மரணத்தினால் அன்றி வேறு எவ்விதத்திலும் ஒருபோதும் கட்டவிழ்க்கப்படாத உறுதியான நிலைத்த தன்மையுள்ளது; இதையே இணைபிரியாப் பந்தனம் என்கிறோம்.

**திருமணம் செல்லுந்தன்மையாக இருப்பதற்கு அவசியமானவை:**

*(1)* தெளிந்த புத்தி அறிவு, *(2)* திருமணம் செய்துகொள்பவர்கள் எந்த வற்புறுத்தலுமின்றி, மனப்பூர்வமான சம்மதத்துடன் திருமணம் செய்துகொள்ளுதல், *(3)* கத்தோலிக்கக் கிறீஸ்தவர்களுடைய திருமணம் மேற்றிராணியார் அல்லது குருவுக்கு முன்பாகவும் இரண்டு சாட்சிகளுக்கு முன்பாகவும் நிறைவேறுதல், *(4)* திருமணத்தைச் செல்லாததாக்கும் எந்த ஒரு முறியல் விக்கினமும் இல்லாதிருக்க வேண்டும்.

## திருமணம் செல்லாது என்று அறிவிக்கத் திருச்சபைக்குள்ள அதிகாரம்

திருமணம் செய்தவர்கள் கணவனும், மனைவியுமாய் வாழ்வதற்கு முன், கனமான காரணத்தை முன்னிட்டுச் சில சமயத்தில் திருச்சபை அவர்களது திருமணம் செல்லாது என்று தீர்ப்பிடலாம்.

அஞ்ஞானிகளாகிய தம்பதிகளில் ஒருவர் கிறீஸ்தவராக மனந்திரும்பியபின், சில சமயங்களில் அவரது திருமண பந்தனத்தைப் பிரிக்க திருச்சபைக்கு அதிகாரம் உண்டு. "அவிசுவாசியாயிருக்கிறவன் பிரிந்துபோனால், பிரிந்து போகட்டும்; ஏனெனில், இப்படிப்பட்ட விஷயத்தில் சகோதரனாவது சகோதரியாவது அடிமைப்பட்டவர்கள் அல்ல. சர்வேசுரன் நம்மைச் சமாதானத்தில் அழைத்திருக்கிறார்" என்று அர்ச். சின்னப்பர் கூறுகிறார் *(1 கொரி. 7:15)*.

*(1)* அஞ்ஞானியாகிய கணவனோ, மனைவியோ சத்திய வேதத்தைப் பகைத்துக் கிறீஸ்தவராக மனந்திரும்பியவரோடு வாழச் சம்மதிக்காமல் இருக்கும்போதும்; *(2)* அஞ்ஞானி கிறீஸ்தவரோடு ஜீவிக்கச் சம்மதித்தாலும், தன் மதச் சடங்குகளை அனுசரிக்க மற்றவரைக் கட்டாயப்படுத்தும் போதும்; *(3)* அஞ்ஞானியாயிருக்கும் மனைவியோ, கணவனோ கிறீஸ்தவ ஆள் சாவான பாவத்தைச் செய்யத் தூண்டும்போதும் (உதாரணமாக, கருத்தடை சாதனங்களைப் பயன்படுத்த அல்லது கருச்சிதைவு செய்ய வற்புறுத்துதல்); *(4)* அஞ்ஞானி கத்தோலிக்க வேதத்தில் பிள்ளைகளை வளர்க்கத் தடைசெய்யும்போதும்; *(5)* அல்லது விபசாரமாய் வாழும்போதும், அவர்களது

கலியாணம் செல்லாது எனத் தீர்மானிக்க திருச்சபைக்கு அதிகாரம் உண்டு. மேலும், முதல் திருமணத்தை மறைத்துச் செய்யப்படும் மறு திருமணமும் தன்னிலேயே செல்லாததாக இருக் கிறது.

ஆத்துமத்துக்காவது சரீரத்துக்காவது கனத்த அபாயம் இருக்கும்போது, அவர்கள் சேர்ந்து வாழாமல் பிரிந்திருக்கலாம். அதன்படி:

*(1)* சாவான பாவத்தைத் தடுக்க வேறு வழியில்லாதபோது, பிரிந்திருக்கலாம்; *(2)* அடி, உதை, ஓயாத சண்டை ஆகியவற்றைச் சகிக்க முடியாதபோது, சிறிது காலம் மட்டும் பிரிந்திருப்பது நல்லது; *(3)* இருவரில் ஒருவர் விபசாரம் செய்தால், குற்றமற்றவர் பிரிந்திருக்க அனுமதி உண்டு. ஆனால் இது எதையும் தீர்மானிப்பதற்குமுன், ஆத்தும குருவிடம் ஆலோசனை பெறுவது அவசியம்.

கிறீஸ்தவர்களின் மெய்யான திருமணம் எப்போதும் தேவத்திரவிய அனுமானமாயிருப்பதால், அதைப் பிரிக்க அரசாங்கத்துக்கு உரிமையில்லை. "சர்வேசுரன் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருப்பானாக" என்று சேசுநாதரே கூறியிருக்கிறார் (மத். 19:6).

ஆகவே, விவாகரத்துப் பெற அரசாங்க நீதிமன்றத்தில் வழக்குத் தொடுப்பவன் சாவான பாவம் செய்கிறான். உலக நீதிமன்றங்களில் விவாகரத்துப் பெற்றவன் மறு திருமணம் செய்துகொள்ள அனுமதியில்லை. ஏனெனில் **கத்தோலிக்கத் திருச்சபை விவாகரத்தை ஒருபோதும் அனுமதிப்பதில்லை.** நீதிமன்றத்தில் விவாகரத்துப் பெற்ற பின்னும், கத்தோலிக்கத் திருச்சட்டத்தின்படி, விவாகரத்துப் பெற்றவர்கள் இன்னும் தம்பதிகளாகவே இருக்கிறார்கள். ஆகவே, விவாகரத்துப் பெற்றபின் ஒருவன் வேறு திருமணம் செய்தால், அவன் விபச்சார வாழ்வு நடத்துபவனாகவே இருப்பான்.

ஏற்கெனவே கூறியுள்ளபடி, சில தீவிரமான காரணங்களுக்காகத் திருமணத்தைச் செல்லாது என்று அறிவிக்கத் (annulment) திருச்சபைக்கு அதிகாரமுள்ளது. தம்பதிகளில் மேற்கூறிய காரணங் களில் ஒன்றால் பாதிக்கப்பட்டவர் முறைப்படி தமது மேற்றிராணியாரிடம் விண்ணப்பித்து, திருச்சபையின் அனுமதி பெற்று, தனது துணையை நிரந்தரமாகப் பிரியலாம்.

அப்படிப் பிரிந்தவர்கள் வேறு திருமணமும் செய்துகொள்ளலாம். ஏனெனில் திருமணம் செல்லாது என்று கத்தோலிக்கத் திருச்சபையால் அறிவிக்கப்படுவது, அப்படி ஒரு திருமணம் உண்மையில் நடக்கவேயில்லை என்பதுதானேயன்றி வேறில்லை. ஆகவே, திருமணம் செல்லாது என்று திருச்சபையால் அறிவிக்கப்பட்டவர் உண்மையில் திருமணம் ஆகாதவராகவே இருக்கிறார். ஆகவே, அவர் இனி செய்து கொள்ளும் திருமணம் உண்மையில் அவருடைய முதல் திருமணமாகவே இருக்கும்.

ஆனால் நீதிமன்ற விவாகரத்து, உண்மையாகவே திருமணம் செய்து கொண்டவர்கள் பிரிந்து செல்லலாம் என்று அரசாங்கம் தரும் அனுமதியாகும். ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது போல, தம்பதிகள் விவாகரத்துப் பெற்ற பின்னும் அவர்கள் திருச்சபைச் சட்டப்படி தம்பதியராகவே இருக்கிறார்கள். ஆகவே, அவர்கள் வேறு திருமணம் செய்வார்கள் என்றால், அது அவர்களது இரண்டாவது திருமணமாகவும், தேவ கட்டளைக்கு எதிரான சாவான பாவமாகவும் இருக்கும்.

தம்பதியரில் ஒருவர் இறக்கும்போது, திருமண பந்தமும் முடிவடைகிறது என்பதால், உயிரோ டிருப்பவர் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளலாம்.

*மரியாயே வாழ்க!*

# அர்ச். ஜான் போஸ்கோ வரலாறு



*அனைவராலும் பொதுவாக டொன் போஸ்கோ என்று அழைக்கப் படும் அர்ச். ஜான் மெல்க்கியோர் போஸ்கோ, இளஞ்சிறுவர்களின் பரிசுத்த வாழ்வுக்கும், அவர்களுடைய கல்விக்கும் தமது வாழ்வை அர்ப்பணித்த ஒரு புனிதமான இத்தாலிய கத்தோலிக்கக் குரு ஆவார். இவர் வடக்கு இத்தாலியில், தூரின் நகரத்திற்கு அருகிலுள்ள பெக்கி என்னும் கிராமத்தில், 1815, ஆகஸ்ட் 16 அன்று, பிரான்சிஸ்கோ போஸ்கோ (1784-1817), மார்கரித்தா ஒக்கியானா (1788-1856) என்னும் பெற்றோருக்கு மூன்றாவது மகனாகப் பிறந்தார். மூத்தவர்கள் இருவரும் சகோதரர்கள்.*

*வீட்டு வறுமை மற்றும் பல கஷ்டங்களின் காரணமாக, போஸ்கோவால் ஒழுங்காகப் பள்ளி சென்று கல்வி கற்க இயலவில்லை. அவருக்கு இரண்டு வயதேயான போது, அவருடைய தந்தை இறந்து விட்டார். ஆகவே, அவருடைய ஏழைக் குடும்பத்திற்கு, அவர் பண்ணையில் வேலைகள் செய்வது அவசியமாக இருந்தது. போஸ்கோ திட்டமிடும் எதையும் கெடுப்பதையே நோக்க மாகக் கொண்டவனாக ஓர் ஒன்றுவிட்ட அண்ணன் அவருக்கு இருந்தான். இந்தக் காரணத்தால் போஸ்கோ ஆரம்பப் பள்ளிக் கல்வியைக் கூட ஒழுங்காகப் பெற முடியாமல் போனது. என்றாலும், தமது ஆத்தும பலத்தையும், பல தாராளமுள்ள இருதயங்களின் உதவிகளையும் கொண்டு, அவர் தம்மைத் தாமே ஆதரித்துத் தாங்கப் போதிய அளவுக்குக் கல்வி கற்றுத் தேர்ந்தார். இந்தச் சமயத்தில், அவர் சில குறிப்பிட்ட வேலைகளுக்குச் சென்றார், அவற்றின் நுணுக்கங்களையும் நன்கு கற்றுக்கொண்டார். இவை அனைத்தையும் பிற்காலத்தில் அவர் அனாதைகளாகிய தம் விடுதி மாணவர்களுக்குக் கற்றுத் தந்தார்.*

*1841ஆம் ஆண்டில் தாம் குருப்பட்டம் பெற்ற பிறகு, அவர் ஏழைகளும், கைவிடப்பட்டவர் களுமான சிறுவர்களுக்காகத் தாம் செய்து வந்த ஊழியத்தை விரிவுபடுத்தினார். தரித்திரத்தில் பிறந்து, தரித்திரத்திலேயே வளர்க்கப்பட்டதாலும், தங்க ஒரு நல்ல வீடு இல்லாமல் தெருவில் வாழ்ந்த ஏழைச் சிறுவர்கள் மத்தியில் வாழ்ந்ததாலும், தங்கள் வீடுகளில் அவர்களுக்கு ஒருபோதும் போதிய அளவுக்குக் கிடைக்காத உணவு, அன்பு ஆகியவற்றிற்காக அவர்கள் கொண்டிருந்த ஏக்கத்தை அவர் நன்கு புரிந்துகொண்டிருந்தார்.*

*இப்படிப்பட்ட சிறுவர்களின் தேவைகளுக்கு அடிப்படைத் தேவைகளைத் தரும் நோக்கத் தோடு, அவர் "சிறுவர் விடுதி" ஒன்றைத் தொடங்கினார். தங்கள் நேரத்தைப் பயனுள்ள முறையில் செலவிட விரும்பிய எல்லாச் சிறுவர்களையும் அவர் அதில் சேர்த்துக் கொண்டார். அவரிடம் தஞ்சமடைந்த சிறுவர்களின் எண்ணிக்கை 1852ல் 36 ஆகவும், 1854ல் 115 ஆகவும், 1860ல் 470 ஆகவும், 1861ல் 600 ஆகவும், சற்றுப் பின்னர் 800 ஆகவும் பெருகியது.*

*தொடக்க ஆண்டுகளில் அவர் தமது விடுதி இருந்த இடத்தை மாற்றிக்கொண்டே இருக்க வேண்டியிருந்தது. அர்ச். மார்ட்டின் ஆலயத்தில் இரண்டு மாதங்கள் மட்டுமே இருந்த பிறகு, சிறுவர்களின் தொந்தரவு தாங்காத அந்தப் பகுதி மக்கள் நகராட்சியிடம் முறையிடவே, அவர் அங்கிருந்து வேறு இடம் தேடி அலைய வேண்டியிருந்தது.*

*சிறுவர்களின் வேலைத் திறமைகளை அதிகரிக்கும்படி, 1853-ல், டொன் போஸ்கோ தமது தாய் மார்கரீத்தாவின் சமையலறையைப் பாதணிகள் தயாரிப்பு, தச்சுத் தொழில் ஆகியவற்றிற்குரிய*

பட்டறையாக மாற்றினார். இதுவே இத்தாலியின் முதல் கத்தோலிக்கத் தொழிற்பள்ளியானது. இதனிடையே தம்மோடு இணைந்து பணியாற்ற முன்வந்த நல்லவர்களின் குழு ஒன்றின் உதவி யோடு, தெருவில் தறுதலைகளாகச் சுற்றித் திரிந்த சிறுவர்களை நேர்மையும், தெய்வ பயமுமுள்ள குடிமக்களாக அவரால் மாற்ற முடிந்தது. உண்மையில், சிறுவர்களைத் திருத்துவதில் அவர் பெற்ற மாபெரும் வெற்றியின் இரகசியம் என்னவென்று கேட்கப்பட்டபோது, அவர் சாதாரணமாக, "அன்பு" என்றார்!

இந்தப் பிறர்சிநேகப் பணியைத் தொடர்ந்து செய்ய, அவர் 1859ல் குருக்களையும், சகோதரர் களையும் கொண்ட சலேசிய சபையை (SDB) ஸ்தாபித்தார். இவர்கள் கத்தோலிக்கத் திருச்சபைக் குள் சிறுவர்களின், குறிப்பாக ஏழைகளும், கைவிடப்பட்டவர்களுமான சிறுவர்களின் கல்விப் பணிக்கென்று அர்ப்பணிக்கப்பட்ட சபையாராக இருக்கிறார்கள். ஏழைச் சிறுமிகளுக்கும் தம் பணியை விரிவுபடுத்த விரும்பி, அவர் அர்ச். மேரி மஸ்ஸரெல்லோ என்பவளின் உதவியோடு, "கிறீஸ்தவர் களின் சகாய அன்னையின் புதல்வியர்" என்னும் கன்னியர் சபை (FMA) ஒன்றையும் 1872ல் நிறுவினார். அது சலேசிய சகோதரிகள் சபை என்று பொதுவாக அழைக்கப்படுகிறது. இந்த இரண் டையும் தவிர, 1876ல், "சலேசிய ஒத்துழைப்பாளர் ஒன்றியம்" என்னும் ஒரு மூன்றாவது ஞானக் குடும்பத்தையும் நிறுவினார். இவர்கள் டொன் போஸ்கோவின் உணர்வுடன், சிறுவர்களுக்காக உழைக்கும் பொதுநிலையினர் ஆவர்.

இவை அனைத்திலும் அவர் மகா பரிசுத்த கன்னிகையின் ஆதரவையும், பாதுகாப்பையும் எப்போதும் உணர்ந்தார். சிறுவர்களுக்கு அவர் செய்ய வேண்டிய ஒவ்வொரு காரியமும், அடிக்கடி அவருக்குக் கனவுகளின் மூலம் உணர்த்தப்பட்டு வந்தது.

இறுதியாக, டொன் போஸ்கோ, 1888, ஜனவரி 31 அன்று மரணமடைந்தார். ஆயிரக்கணக் கானவர்கள் அவருடைய இறுதிச் சடங்கில் கலந்துகொண்டார்கள். தூரின் அதிமேற்றிராசனம் அர்ச்சியசிஷ்ட பட்டத்திற்காக விசாரணையைத் தொடங்கியது. சாட்சிகள் விசாரிக்கப்பட் டார்கள். சலேசியர்கள், புதல்வியர், ஒத்துழைப்பாளர் என்று அனைவரிடமிருந்தும் சாட்சியங்கள் வந்து குவிந்தன. டொன் போஸ்கோ பற்றி ஏற்கெனவே அறிந்திருந்த பாப்பரசர் பதினோராம் பத்திநாதர் தொடர்ந்து இந்த விசாரணை நடக்க உந்துதலாக இருந்தார். அவரே 1929, ஜூன் 2 அன்று அவருக்கு முத்திப்பேறு பட்டமும், 1934, ஏப்ரல் 1, உயிர்ப்பு ஞாயிறன்று, அர்ச்சியசிஷ்ட பட்டமும் வழங்கினார். அப்போது, "சிறுவர்களின் தந்தை மற்றும் ஆசிரியர்" என்னும் பட்டம் அவருக்கு வழங்கப்பட்டது. பன்னிரண்டாம் பத்திநாதர் 1949ல், கத்தோலிக்க அச்சு வெளியீட் டாளர்களின் பாதுகாவலராக அவரைப் பிரகடனம் செய்தார்.

மரியாயே வாழ்க!

**33 நாள் தயாரிப்பு: பிப்ரவரி 20-ல் தொடக்கம்**

தேவமாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்ய அல்லது புதுப்பிக்க ஆயத்தமாக 33 நாள் தயாரிப்பு பிப்ரவரி 20-ம் தேதி துவக்கி, மார்ச் 24-ம் தேதியில் முடிவடைகிறது. இந்தத் தயாரிப்பை நல்ல விதமாகவும், தகுந்த பக்தியோடும் செய்து, மார்ச் 25 அன்று மாதாவின் அமல உற்பவத் திருநாளன்று நமதன்னைக்கு உங்களை முழு அர்ப்பணம் செய்யும்படியாகக் கேட்டுக் கொள்கிறோம். இந்த அர்ப்பணத்தைச் செய்பவர்கள் மாதாவின் அப்போஸ்தலர் களாக ஆகிறார்கள் என்று **அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்** கூறுகிறார்.



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



Cell: 94876 09983 Landline: 0461 2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1 | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | |
| 2 | உலகின் இறுதிக் காலங்கள் | 125.00 | |
| 3 | திருப்பாடுகளின் வரலாறு | 150.00 | |
| 4 | அனுதின ஜெபப் புத்தகம் | | |
| 5 | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | |
| 6 | அறிவோம் பத்துக் கட்டளைகள் | 100.00 | |
| 7 | மலைமேல் பிரசங்கம் | 65.00 | |
| 8 | அறிவோம் அப்போஸ்தலர்களை: அர்ச். பிலவேந்திரர் | 90.00 | |
| 9 | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள் அடங்கியது) | 325.00 | |
| 10 | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு | 125.00 | |
| 11 | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 250.00 | |
| 12 | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | |
| 13 | பாத்திமா காட்சிகள் | 100.00 | |
| 14 | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | |
| 15 | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | | |
| 16 | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | |
| 17 | என்னைப்படி அல்லது வருத்தப்படு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 25.00 | |
| 18 | ஞான உணர்த்துதல் | 40.00 | |
| 19 | Read Me or Rue It | 60.00 | |
| 20 | என்னைப் படிக்காவிட்டால் வருத்தப்படுவாய் | 80.00 | |
| 21 | கத்தோலிக்க வேத சத்தியங்கள் | 45.00 | |
| 22 | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | |
| 23 | ஞான சரீரம் | 35.00 | |
| 24 | சலேத் இரகசியம் | 35.00 | |
| 25 | மரியாயின் இரகசியம் | 30.00 | |
| 26 | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | |
| 27 | The Penny Catechism | 35.00 | |
| 28 | அமலோற்பவ மாமரியின் போரணி | | |
| 29 | அன்னையை நேசிக்கப் பன்னிரு படிகள் | | |
| 30 | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 35.00 | |
| 31 | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | |
| 32 | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | |
| 33 | வியாகுல மாதா பக்தி | 35.00 | |
| 34 | தலை வெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 25.00 | |
| 35 | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 15.00 | |
| 36 | காவல் சம்மனசானவர் | 10.00 | |
| 37 | சிலுவைப் பாதை | 15.00 | |
| 38 | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | |
| 39 | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | |
| 40 | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | |
| 41 | அர்ச். சூசையப்பர் பக்தி மாலை | 15.00 | |
| 42 | அர்ச். சூசையப்பர் மகத்துவங்கள் | 60.00 | |
| 43 | ஆதித் திருச்சபையின் பத்து வேத கலாபனைகள் | 10.00 | |
| 44 | திருச்சபையின் கட்டளைகள் (சிறிய விளக்கத்துடன்) | 10.00 | |
| 45 | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | |
| 46 | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | | |
| 47 | தேவ அழைத்தல்கள் | 35.00 | |
| 48 | சின்னக் குறிப்பிடம் | 10.00 | |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 49 | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம் | 25.00 | |
| 50 | மனச் செபம் ஒரு விளக்கம் | 35.00 | |
| 51 | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வரலாறு) | 70.00 | |
| 52 | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு –Fr. அந்தோனி சேவியர் தொகுத்து எழுதியது | 60.00 | |
| 53 | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 100.00 | |
| 54 | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | |
| 55 | 33 நாள் தயாரிப்பு: மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | | |
| 56 | இறுதிக் கால யுகம் | 100.00 | |
| 57 | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | |
| 58 | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | |
| 59 | வேத விளக்கம் (வீரமாமுனிவர் (சங்.ஜோசப் பெஸ்கி, சே.ச.) எழுதியது | 150.00 | |
| 60 | அன்பின் அரசர் | 150.00 | |
| 61 | நரகம் | 60.00 | |
| 62 | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 13.00 | |
| 63 | அர்ச். சிலுவை அருளப்பர் வாழ்க்கை வரலாறு | 80.00 | |
| 64 | நரக சத்தியம் | 70.00 | |
| 65 | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | |
| 66 | மரியாயின் மகிமைகள் | 170.00 | |
| 67 | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | |
| 68 | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | |
| 69 | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | |
| 70 | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | |
| 71 | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | |
| 72 | புனித அவிலா தெரேசம்மாள் சரித்திரம் | 160.00 | பாகம் 2:ரூ.250 |
| 73 | கடவுள் மனிதனின் காவியம் (முதல் பாகம்) | 350.00 | |
| 74 | கடவுள் மனிதனின் காவியம் (இரண்டாம் பாகம்) | 350.00 | |
| 75 | கடவுள் மனிதனின் காவியம் (மூன்றாம் பாகம்) | 550.00 | |
| 76 | கடவுள் மனிதனின் காவியம் (நான்காம் பாகம்) | 350.00 | |
| 77 | கடவுள் மனிதனின் காவியம் (ஐந்தாம் பாகம்) | | |
| 78 | கடவுள் மனிதனின் காவியம் (ஆறாம் பாகம்) | 350.00 | |
| 79 | கடவுள் மனிதனின் காவியம் (ஏழாம் பாகம்) | 350.00 | |
| 80 | கடவுள் மனிதனின் காவியம் (எட்டாம் பாகம்) | | |
| 81 | கடவுள் மனிதனின் காவியம் (ஒன்பதாம் பாகம்) | | |
| 82 | கடவுள் மனிதனின் காவியம் (பத்தாம் பாகம்) | 550.00 | |

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து, நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா ரூ. 150/- கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.உங்கள் ஆன்ம சரீர நன்மைகளுக்காக தினமும் எங்கள் ஜெபங்களில் வேண்டிக்கொள்கிறோம். **உங்கள் மொபைல் எண்ணை அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.**
2. மாதா பரிகார மலர் சந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் **94876 09983 என்ற எண்ணுக்கு Google Pay செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம்.**

A/c Name: SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code: SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch, Tuticorin.

**அனுப்ப வேண்டிய முகவரி**

**மாதா அப்போஸ்தலர்கள் சபை, ரோஸா மிஸ்திக்கா,**
**11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி. பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628 002.**
**போன் : 0461 2361989, அலைபேசி: 94876 09983. Email: tutirosamystica@gmail.com**
**சந்தா நன்கொடை செலுத்த: Google Pay: 94876 09983.**
**Website: www.apostlesofmary.in**

**நமது மாதா அப்போஸ்தலர்கள் சபைக்கு அனுப்பும் நன்கொடை மற்றும் காணிக்கைக்கு வரிச் சலுகை பெற்றுக்கொள்ள ரசீது (80G - AAJTS6976JF20215) பெற்றுக்கொள்ள முடியும்.**

**சேசு மரியாயில் அன்புள்ள நண்பர்களே, உபகாரிகளே,**

நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலய கட்டட வேலைகள் கடந்த ஆறு ஆண்டுகளாக நடந்து வருகின்றன. சேசுவின் திரு இருதயத்திற்கும் (திவ்ய நற்கருணைக்கும்), மேலும், தேவ மாதா பாத்திமாவில் கேட்டுக்கொண்டபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்திக்கென்றும் இந்த ஆலயத்தை மிகுந்த முயற்சியுடன், உபகாரிகளின் உதவியினால் கட்டி வருகிறோம். தேவையான உதவிகள் கிடைக்காமையால் இக்கட்டட வேலைகள் இன்னும் முடியவில்லை. நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலயத்தை முழுமையாகக் கட்டி முடிக்க கீழ்க்கண்ட வகைகள் தேவைப்படுகின்றன:

| | | |
|---|---|---|
| 01. | ரூஃப் (Roof) & கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 30,00,000.00 |
| 02. | பீடத்தின் மேல் (Center) டவர் கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 9,00,000.00 |
| 03 | ஆலயத்தின் உள்பக்கம் & வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & கூலி | ரூ. 10,00,000.00 |
| 04. | ரூஃப் மேல் பக்கம் & உள்பக்கம் பூசுவதற்குப் பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 12,50,000.00 |
| 05. | கூரை ஓடு பதிக்கப் பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 7,00,000.00 |
| 06. | ஆலயத்தின் முன் கோபுரம் (Front Tower) கட்டுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 7,50,000.00 |
| 07. | குருக்கள் தங்கும் இல்லத்திற்கு உள்பக்கம், வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 1, 05,000.00 |
| 08. | தேக்கு மரம் நிலை & கதவு 9, ஜன்னல் 14, லேபர் & வுட் பாலிஷ் | ரூ. 17,50,000.00 |
| 09. | தரைக்கு வெள்ளை மார்பிள் கல் & லேபர் கூலி | ரூ. 24,00,000.00 |
| 10. | எலெக்ட்ரிக்கல் சாமான்கள், (Fittings)விளக்குகள் & லேபர் கூலி | ரூ. 6,00,000.00 |
| 11. | ஆலயம் முழுவதற்கும் வர்ணம் பூச பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 12,00,000.00 |
| 12. | கண்ணாடி ஓவியங்கள் வேலை | ரூ. 9,00,000.00 |
| 13. | திவ்ய பலிபூசை நிறைவேற்ற முக்கிய பீடம் (தேக்கு மர வேலை) | ரூ. 9,25,000.00 |
| 14. | பீடத்தின் இரு புறமும் (Altar Sides) தேக்கு மர வேலை | ரூ. 7,00,000.00 |
| | ஆலயம் கட்டி முடிக்கத் தேவையான மொத்தத் தொகை | ரூ.1,61,80,000.00 |

இந்த ஆலயத்தைக் கட்டி முடிக்க மாதாவின் அன்புப் பிள்ளைகள் தங்களால் முடிந்த உதவி அளிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**வங்கி விபரம்:**

**A/c Name : Society of Apostles of Mary**
**A/c No. : 1218000000473**
**IFS Code : IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappillaiyurani Branch,**
**Thoothukudi.**
**For Tax exemption: 80G - AAJTS6976JF20215**

இவண்,
மாதா அப்போஸ்தலர்கள் சபை மற்றும்
மாதா அப்போஸ்தலர்கள்
முகவரி:
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
11 / 519, சகாயமாதா பட்டணம், 2-வது தெரு,
தூத்துக்குடி - 628 002. போன்: 0461 2361989
அலைபேசி: 94876 09983 / 94872 57479
Email: tutirosamystica@gmail.com

# உலக ஜெயராக்கினி மாதா ஆலயம்



ஆலயத்தின் முழுத்தோற்றம்



கான்கிரீட் போடுவதற்குமுன் நடைபெறும் சென்ட்ரிங் வேலையின் ஆலயத் தோற்றம்.

**முகவரி**

மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
11/519, சகாயமாதாபட்டணம்,
2வது தெரு, தூத்துக்குடி – 628 002.
தொலைபேசி: 0461 2361989
அலைபேசி: 94876 09983, 94872 57479
E-mail: tutirosamystica@gmail.com

**வங்கி விபரம்**

Account Name:
Society of Apostles of Mary
Account No. 121802000000473
IFS Code: IOBA0001218
Indian Overseas Bank,
Mappillaiyurani Branch,
Thoothukudi.

Google Pay: 94876 09983      Avail 80G for Tax Exemption - AAJTS6976JF20215



**ஜனவரி & பிப்ரவரி மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துக்கள்**

**ஜனவரி** தேவமாதா ஜென்மப் பாவமில்லாமல் உற்பவித்தார்கள் என்ற சத்தியத்தை மறுக்கும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக;

**பிப்ரவரி** தேவமாதா சர்வேசுரனுடைய தாய் என்ற சத்தியத்தை மறுக்கும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக;

மரியாயின் மாசற்ற இருதயத்திற்குப் பரிகாரம் செய்யும் கருத்தோடு முதல் சனிக்கிழமைகளில் **1.** பாவசங்கீர்த்தனம் செய்து, **2.** திவ்ய நன்மை உட்கொண்டு, **3.** 53 மணி ஜெபமாலை ஜெபித்து, **4.**ஜெபமாலையின் தேவ இரகசியங்களைத் தியானித்தபடி 15 நிமிடம் என்னோடு தங்கியிருப்பவர்களுக்கு, அவர்களது ஆத்தும இரட்சணியத்திற்கு அவசியமான சகல வரப்பிரசாதங்களையும் கொண்டு அவர்களின் மரண சமயத்தில் உதவுவதாக வாக்களிக்கிறேன்.

இதுவே முதல் சனி பக்தி முயற்சி அனுசரிக்கும் முறையாகும்.



**MATHA PARIKARA MALAR**
**ROSA MYSTICA**
**(Opp. V.V.D. H. Sec. School)**
**SAHAYAMATHAPATTANAM**
**TUTICORIN - 628 002.**
**PH: 0461 - 2361989**
**Cell: 94876 09983**
**Whatsapp & Gpay: 94872 57479**
E-mail: tutirosamystica@gmail.com
Web:www.apostlesofmary.in

**மாதா பரிகார மலர்**
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் – 628 002
போன்: 0461 – 2361989
அலைபேசி: 94876 09983

To

Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy, Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.
Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.
Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.
Editor: Sammanasu Navis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.